பிள்ளையார் சுழியும்

சைவ மெய்ந் நெறியும்

உ

ஆதியே துணை

# பிள்ளையார் சுழியும் சைவ மெய்ந் நெறியும்



எழுதியவர்:

மெய்வழி கலைமகா அனந்தர்

(மா. துரைசாமி முதலியார்)

Finger Print Expert (Retd.) of Madras State

வெளியிட்டவர்:

லால்குடி

(திருத்தவத்துறை)

திரு N. T. விஸ்வநாதம் பிள்ளை B. A., B. L.

அட்வகேட்,

தில்லை நகர், திருச்சிராப்பள்ளி.

 [விலை: 10 அணா

2

3-2

பூ:அ:அ

# பாத காணிக்கை

இந் நூல்,

நெறிமுறை வகுத்த அருமைசால் மெய்ம்மை
மறுபிறப் பளித்துத் துறையெனக் கருளிய
ஒருபெருந் தெய்வ சிவகுரு வரதரின்
சிறப்பெலாந் திரண்ட செம்பொன் னடிக்கே
உரித்தாய் நின்று உலகில் நிலவவே.

*மெய்வழி கலைமகா அனந்தன்*

N. T. *விஸ்வநாதம் பிள்ளை*, B.A., B.L.,
*திருச்சிராப்பள்ளி*

உ

# வெளியீட்டுரை

திரு M. கலைமகா அனந்தரவர்கள் எழுதிய "பிள்ளையார் சுழியும், சைவ மெய்ந்நெறியும்" என்ற கட்டுரைகளையும், அவைகட்கு முன்னணியாக, எமது உரிமை நண்பர் ராவ் சாகிப் திரு, M. கயிலை அனந்தரவர்கள் ஆங்கிலத்திலும், ராவ்சாகிப் திரு T.A.V. நாதன் அவர்கள் தமிழிலும் எழுதிவைத்துள்ள அணிந்துரைகளையும் படித்துப் பார்த்தேன். தமிழ்ப் பழக்கம் மிகுதியும் இல்லாதார்க்கு இக் கட்டுரைகளின் உட்பொருள்களைச் சுருக்கமாக ஆங்கில அணிந்துரை அறிவிக்கிறது. இவைகளை ஆழ்ந்து சிந்தித்துப் படிப்பவர்கள் பெரும்பயன் பெறுவரென்பதில் ஐயமில்லை.

நம் முன்னோர்கள் எடுத்துவைத்த பிள்ளையார் சுழி, அவ்வாறே பாதுகாக்கப்படவில்லை யென்பதை அறிவேன். இதற்கு, அதன் உண்மை உள்ளபடி உணர்த்தப்பெருதது ஒரு காரணமாகும். இது போலவே சமயங்களின் உள்ளுறுப்பாகிய மெய்ந்நெறியும், குருமார்களென்று தாமே பெயர் வைத்துக் கொள்பவர்களின் மலிவால் மறக்கும் நிலைக்கு வந்தாயிற்று.

இக்கட்டுரைகள் நம் சீவாதாரமாகவுள்ள கருத்துக்களை நமக்கு நினைப்பூட்டுகின்றன; உண்மையுணர்த்துகின்றன; பிறவிப் பெரும்பயனைப் பெறத் தூண்டுகின்றன. ஆகலின், இவற்றைப் பலரும் படித்துப் பயன் பெறுவார்களென்றே அச்சேற்றிவைக்க விரும்பினேன்.

N. T. விஸ்வநாதம்

ஆதியே துணை

## உரை முகப்பு

இந் நூலில், **பிள்ளையார் சுழியின்** உண்மையும் **சைவ மெய்ந்நெறியின்** விளக்கமும், இரண்டு கட்டுரைகளில் தொகுத்துச் சேர்க்கப்பெற்றிருக்கின்றன. பிள்ளையார் சுழி, பொதுவாகவே மெய்ந்நெறியில் உள்ளதாயினும், மாநெடுங் கால வயதினையுடைய புராதனச் சைவ உலகில் பெரிதும் கையாளப்பெற்று வருவது. ஆதலின், இவ்விரண்டு கட்டுரைகளும் ஒன்றுக்கொன்று தொடர்புடையனவே.

'**பிள்ளையார் சுழி**'யைப் பற்றிய கட்டுரையினைச் சுருக்கி உரைக்கின், இதுவே 'கடவுளின் அல்லது பிரமத்தின் திருவடியாகிய குஞ்சிதபாதம்' என்போம். இது பற்றியே தெய்வத் **திருமூலரும்**,

"திருவடி ஞானஞ் சிவமாக்கு விக்கும்
திருவடி ஞானஞ் சிவலோகஞ் சேர்க்கும்
திருவடி ஞானஞ் சிறைமல மீட்கும்
திருவடி ஞானமே திண்சித்தி முத்தியே."

"வைத்தேன் அடிகள் மனத்தினுள் ளேநான்
பொய்த்தே யெரியும் புலன்வழி போகாமல்
எய்த்தேன் உழலும் இருவினை மாற்றிட்டு
மெய்த்தேன் அறிந்தேனவ் வேதத்தின் அந்தமே."

"மந்திர மாவதும் மாமருந் தாவதுந்
தந்திர மாவதுந் தானங்க ளாவதுஞ்
சுந்தர மாவதுந் தூய்நெறி யாவதும்
எந்தை பிரான்தன் இணையடி தானே."

என்று அருளிச் செய்துள்ளார். இனி, இறை திருவடியே "பிள்ளையார் சுழி"யென வழங்கப் பெறுவதுபோல், மெய்ந்நெறியும் "சைவ மெய்ந்நெறி"யென இங்குப் பேசப் பெறுகின்றது.

•

நீர் என்ற பொருளுக்குப் பல மொழிகளில் பல பெயர்கள் உண்டு. ஆனால் அதன் குணத்திலும் செயலி லும் வேற்றுமையில்லை. இவ்வாறு, ஒன்றேயான கடவுட் பொருள், ஆங்காங்கு வெவ்வேறு பெயர்களைப் பெற்றும், குணத்திலும் செயலிலும் எங்கும் ஒரு தன்மையதாயிருக் கின்றது. இந்த ஒரு படித்தான, எக்காலத்தும் மாறுத் தன்மையுடைய கடவுட் பொருளை அடைந்தனுபவிக்கும் மெய்ந்நெறிச் செயல் முறையும் எங்கெங்கும் ஒன்றே யாம்.

'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்ற தெய்வத் திருமூல நாயனுர் அவர்களே, "மேற்கொள்ளலாவதோர் மெய்த்தெய்வம் ஒன்றுண்டு—மெய்த்தாளும் ஒன்றுண்டு— மெய்ந்நெறியும் ஒன்றுண்டு" என்று அருளிச் செய்துள் ளார். ஓர் ஊருக்குச் செல்லப் பல வழிகள் இருப்பது போல் பிறவிப் பெரும்பயனுகிய வீட்டினை யடையவும் பல வழிகள் உண்டென்று கூறுவர். 'பல வழிகள்' என் பது சமய அனுட்டான சாதன முறைகளேயேயாம். மெய்ந்நெறியில் நடப்பவர்கட்கு அம்மெய்ந்நெறி எங்கும் ஒன்றேதானென்பது, அவர்தம் செயலனுபவம்,

சைவச் செந்நெறி மிகவும் தொன்மையது. கால எல்லையைக் கடந்து நின்றது. ஆகவின், இதன் கட்டு குலைந்துவிட்டது. இச் சைவ மெய்ந்நெறியில் நடப்பவர் களின் எண்ணும் குறைந்தது. வீடு பெறுவதென்பதே

வீண்மொழி என்ற பேச்சு பரவியது. ஒருசிலர் வீடென்ற சொல்லே போதுமென்று அதன் பொருளைக் கருதாதிருக்கின்றனர். இவர்கள் மெய்யாகவே உணவு உண்டால்தான் பசியாறும் என்று நினைக்காதவர்கள்.

மேலும், நிலையா நிதியைப் புறக்கணித்து, நிலைத்த நிதியைப்பெற்ற **பட்டினத்துப் பிள்ளையார்** அவர்கள்,

"நீற்றைப் புனைந்தென்ன நீராடப் போயென்ன நீமனமே
மாற்றிப் பிறக்க வகையறியந் தாயில்லை மாமறைநூல்
ஏற்றிக் கிடக்கும் எழுகோடி மந்திரம் என்ன கண்டாய்
ஆற்றிற் கிடந்து துறையறி யாமல் அலைகின்றையே"

என்று அருளிச் செய்துள்ளதால், மாற்றிப் பிறப்பிக்கும் மறுபிறப்பினைப் பெறுதார், கரையேறும் மெய்ந்நெறித் துறையினை அறியாதவர்களே என்று அறியக்கிடக்கிறது. இங்கே, மறுபிறப்பருளும் வள்ளல் மெய்யான குரு பெருமான் அவர்களே. இது பேச்சன்று; செயலே. இன்னும், மெய்ந்நெறித்துறை ஒன்றே எனவும், அத்துறையிற் செல்வோரே தேவரெனவும் வேதம் கூறுவதால், இவ்வாறு மக்கட் பிறப்பினின்றும் தேவப் பிறப்பினை எய்தாதார், எத்துணை மாட்சியுடையரேனும் பிறவிப் பயனைப் பெறுவதற்குரியராகா வறிய ரென்றே கருதப்படுவர்.

மறுபிறப்புப் பெற்று, மெய்ந்நெறியிற் சென்று, வீட்டினை மெய்யாகவே பெற்றவர்கள் இருந்தனர், இருக்கின்றனர், என்றும் இருப்பர் என்று எடுத்துக் கூறவே இவ்வுரைகள் இங்கு தொகுத்துவைக்கப் பெற்றன. இவற்றைத் தொகுக்க விரும்பியவர் எனது மேதக்க அன்பு கெழுமிய சிவேசப் பெருந்தகைப் பிறவியர்

திருச்சிராப்பள்ளி ராவ்சாஹிப் M. கயிலை அனந்தர் B.A. B.L., அவர்கள். இவரே, இன்றியமையாத ஆங்கில அணிந்துரை யொன்றையும் வழங்கியுள்ளார். தமிழில் அணிந்துரை வழங்கியவர் மெய்ந்நெறிபற்றி யொழுகும் எமதுபெருந்தகைப் பேரன்பர், "தமிழ் நாடு" ஆசிரியர் ராவ் சாஹிப் T.A.V. நாதன் B.A., B.L. அவர்கள். இதனை வெளி யிட உதவியவர், சைவப் பெருங்குடிப் பிறந்த தெய்வநல விருப்பச் செல்வர், லால்குடி என வழங்கும் திருத்தவத் துறை திரு N.T. விஸ்வநாதம் பிள்ளை B.A., B.L., அவர்கள். இம்மூன்று அறிஞர்கட்கும் எம் நன்றி என்றும் உரியது.

இங்கு விவரித்துள்ள சைவ மெய்ந்நெறியே உலகி லுள்ள, அறச்செயலை உட்கொண்ட எல்லா மெய்ந்நெறி மதங்கட்கும்பொருந் துமாகலின், இதனைப்பலரும் படித்து, இவ் வகமுக மெய்ந்நெறியானது, புறமார்கிய தூலத்திற்குள் புதைந்து மறைந்து கிடக்கின்ற தென்பதை உணர்ந்து, இதனை மெய்க்குரு பிரான் அவர்களின் திருவடித் துணை கொண்டு கைப்பற்றி, எம்மைப்போல், அழியாத பேரின் பப் பெரும் பாதையில் நடந்தேறி, மெய்ப்பயன் பெற்று உய்வார்களாக.

M. கலைமகா அனந்தர்

*Rao Sahib*
M. KAILAI ANANDAR,
B.A., B.L.,
Advocate

*Tiruchirappalli.*

# Appreciation

In this invaluable and worthy brochure, my esteemed friend and spiritual brother, *Sri. M. Kalai Maha Anandar*, has contributed two illuminating articles under the caption "*Pillaiyar Suzhi*" and the "*True Path of Saivism*". Herein the author has depicted on broad but clear lines the secret method of God-Realization initiated by the great hierarchy of Sat Gurus to their disciples from time immemorial. The secret concealed with remarkable skill in the two-fold symbols of "Pillaiyar Suzhi" and "Nataraja", when once revealed by the grace of a Sat Guru to his disciple, will give unto the latter at once a spiritual upliftment to God-hood. The symbol "Nataraja" also stands for "*Panchakshara.*" The full import and significance of these and similar mystic symbols of the True World Religions have never been fully or correctly understood except by

those who have been duly initiated into the secrets of the ancient wisdom or *Brahma Vidya*. It is an accepted factor that this ancient wisdom is treasured unsullied by those spiritual descendants who form a spiritual hierarchy of initiates of wisdom and perfection. Veiled in allegories and illustrated by symbols, this arcane Science or Secret-Wisdom—*The Gupta Vidya*—is ever available to those who seek for it in the time-honoured traditional path of getting it imparted from a true Guru who alone could shed lustre to the Life-Eternal. Normally such initiates keep significantly silent over these infinite secrets, and if at all they break their avowed silence, they only hint at the reality in guarded and veiled language, which could charge the battery of only the deserving Souls, thrilling them to that great bliss of *Paramananda*. Sri Kalai Maha Anandar, while observing the traditional restrictions enjoined on a true disciple (Sishya) against giving out openly these occult truths, has however given us a fairly clear and concise exposition of the "Mystic Symbols" so that a larger section of the aspiring souls might be enabled to dive deep

into that ocean for the acquisition of this most vital and significant knowledge, the *Brahma Gnana*.

"Panchaksharam"—the sacred *Moola Mantra*—is symbolically portrayed by the figure 'Nataraja' with 'Thiruvasi' a halo or circle of flame (Jwala Mala Prabha Mandala), the symbol of perfection. The author of this article has taken no little pains to explain in detail the great esoteric significance of this beautiful image of Nataraja—a beatitude in all its physical, subtle and spiritual aspects. Incidentally, he has also hinted in a broad but clear way as to how one can attain the highest spiritual plane, symbolically represented by the "Kunjitha Paadam" of Nataraja—the abode of perpetual bliss where alone God can be realized in His fullest splendour and effulgence and worshipped 'in spirit.' This aspect has been graphically explained in 'Unmai Vilakkam' by the great sage Thiruvathigai Manavasagam Kadanthaar.

In this valuable treatise the sage while explaining tho 'Nadhantha Dance' propounds a question, as though addressing the Guru, as follows :—

"O, my gracious Guru! Thou hast explained to me beautifully the natnre of the Nadhantha Dance. Let me know the nature of Panchakshara. Can they be one with the letters which are perishable?" The answer according to the sage, is again significant and pregnant:—"The symbols of these letters may be perishable, but not their connotation in any language existing and ever to come."

There is also another comprehensive and all-embracing statement:—" In the Panchakshara are found Agamas and the Vedas, given out by the gracious God. In it are found the Puranas. In it is the Blissful Dance, and in it is found the Silent Mukthi, which passes beyond all states, Static and Dynamic." This symbol, in short, is a secret indication of a definite and distinct spiritual Sadhana, which leads to the realization of God.

The author next attempts to explain the esoteric significance of what is described as the "Feet" or "Paadam" of God, found often repeated in such sacred works as 'Thirukkurul', 'Thiruvachakam', 'Thirumandiram' etc., The author hints that the terms 'Thiruvadi' (திருவடி), 'Paadam' (பாதம்),

'Nalthal' (நற்றாள்), Adi (அடி), Kazhal (கழல்) —all indicate a spiritual plane of bliss experienced by the aspirant lifted up to that blessed state by his Master. There is indeed a definite method well-known to the adepts who initiate their disciples and help them to experience this state of bliss. Several years ago when Sir Edward Carpenter came to India in search of ancient wisdom-religion—an adept at Tanjore told him in significant language as hereunder :—

"You in the West, say 'O, God! O, God!' but you have no definite knowledge or method by which you can attain to see God. It is like a man who knows there is ghee to be got out of a cow. He walks round and round the cow and cries 'O, Ghee,' 'O, Ghee'! Milk pervades the cow, but he cannot find the milk. Then when he has learnt to handle the teat, and has obtained the milk, he still cannot find the ghee. It pervades the milk and has also to be got by a definite method."

So there is a definite method—by which the divine consciousness can be educed from the soul, but it is only in the hands of a

genuine Guru these complete instructions exist, by which the true disciple who is ripe and mature may systematically and surely attain the object of his search—that *Great Truth* to which he may ascend as one ascends the ladder, from the lowest to the highest rung.

Every initiate traversing this path under the immediate presence and guidance of the Sat Guru—Perfect Master—will bear out amply the correctness of the above statement. But a large body of men who have merely read the sacred books of the land sometimes assume that they have acquired the true spiritual knowledge, and all that they need is to follow some directions mentioned therein. They complacently state in the press and on the platform that a Guru is unnecessary for spiritual progress; and they even go to the extent of characterizing the very idea that a Sat Guru is essential for spiritual progress, as a mere relic of a bygone superstition and that it is all nonsense.

We do not know how to penetrate into the depths of our inner consciousness. We

do not know how to pierce the hard shell, the rock of the mind, and uproot and eschew our passions and desires. We have no bridge spanning the borderland between the material and the spiritual—the higher plane. We have no rail road traversing the subtler regions to facilitate our homeward journey, the birth-right of everyone. Sadly inadequate and meagre are the measures that we take to meet the claims of the higher aspirations. Of theological disputes, metaphysical subtleties and inflated sermons, we have enough and more. But to the earnest seeker after truth, to the heart panting after and pulsating for the waters of peace, they are provokingly useless.

The following quotation cited in extenso from the writings of a Bengali writer written in 1899 are as true to-day as they were at his time:—

"What a strange inconsistency is it then that we are not alive to the importance of, and the neccessity for, a Sat Guru or an experienced spiritual guide for spiritual progress, which is most intimately bound up with the closest and dearest of interests of

human life and which may justly be called the Science of Sciences and the Art of Arts.

"From theory to practice it is a far and hoarse cry; the gulf must be bridged over. The theoretical portion of religion is hardly anything more than an exposition of the abstract principles which mere booklore or hearsay may enable us to learn, appreciate and master. But the practical and the most important portion of religion cannot be grasped, followed and mastered without the *aid* and instruction of a Guru who alone can guide one to that Great Secret—the Life Beyond.

A real Sat Guru is not one of the self-constituted teachers of humanity—those "false prophets" who are interested in keeping their professional influence and prestige, holding an ignoble sway over the masses by pandering to their folly and superstition. No hall-mark of a university education, no family pedigree, no royal patronage, no mere outward marks of a rigorous asceticism can lay the least claim to the highest spiritual wisdom. No one is fitted to be our Master or Spiritual Guide who has

not eliminated his spirit from all its material wrappings and ascended the highest plane of his being. He must be one who has, by actual practice and devotion, raised his spirit above the material spheres and reached the highest region, or one who has come down on earth from the highest sphere and taken the form of man for teaching humanity and helping them forward in the path of evolution towards perfection. Such a person alone knows the secrets of the descent of the spirit on this earth. He alone knows how the spirit has individualised and limited itself by taking sheath after sheath.

Sri Kalai Maha Anandar as the exponent—the Son of a true Guru has correctly but concisely explained, in this short and sweet pamphlet, the greatest ideal of perfection sought and yearned after, by all true aspirants in every age. The grace of the sacred Feet—"the Guru Paadam-or Kunjitha Paadam" can be achieved only by a definite method—a Sadhana practised and perfected in the immediate presence and guidance of a Sat Guru. It is the custom of our ancients to preserve esoteric knowledge in symbols. Most of the

symbols used by the people from time immemorial have deep mystical meaning. The initiates alone are taught the real inner meanings of the symbols. The symbols have immense meaning in Esoteric Philosophy. The writer of these articles will consider that he will be rewarded amply if he could only create a healthy outlook in the minds of the readers for the study of these symbols. Sri Kalai Maha Anandar has done a distinct and signal service to aspirants in the path of true knowledge as an ardent disciple of a Great Master. He is eminently fit to write on this vital subject of "Pranava Dhyana" referred in several Upanishads. Sri Kalai Maha Anandar combines in himself the two most important requisites for such a task—scholarship and practical realization at the Feet of his Master, the Avatar of the times in which we are living.

I commend this brochure to the earnest study of all genuine seekers after truth. May they all be blessed with the grace of the Living God Most High!

*M. Kailai Anandar*

ஆதியே துணை

*ராவ் சாகிபு டி. ஏ. வி, நாதன்,*
*பி.ஏ.பி.எல்., டிப். எகான். டி. ப்ரெ.*
*ஆசிரியர், "தமிழ் நாடு," மதுரை.*

## அணிந்துரை

உலகெலாம் பரவிப் பணியாற்றிவரும் ஞானக் கொல்லர் (Freemasonry) என்ற குருகுல நகல் இயக்கத்தில் சேர்ந்துள்ளவர்கள், சொற் சின்னம், பொருட் சின்னம், வரிவடிவ அடையாளம், சடங்கு அறிகுறிகள் முதலியவை அனைத்தும் பெரும் பொருள் விளக்கத்திற்காக அமைந்துள்ளன என்பதை நன்கு அறிவர். அத்தகைய புறமுக அடையாளங்கள் பல, நம் தமிழ் நாட்டில், பொருள் விளங்காது, பின்பற்றப்பெற்று வருகின்றன. அவற்றுள் சிறப்பானதொன்று **"பிள்ளையார் சுழி"** அல்லது **ஏகாட்சரம்** அல்லது **ஊமை எழுத்து** என்பதாகும். இதைக் குறித்துத் தவறான சில கருத்துக்கள் உலவி வருகின்றன. எடுத்துக்காட்டாகப் **"பிள்ளையார் சுழி"** என்பது ஒரு பொருளுமில்லாத வீணான அடையாளமென்றும், பனை ஓலையில் எழுதும்போது ஓலை பதமுள்ளதா, எழுத்தாணி கூர் உள்ளதா என்று பார்ப்பதற்காகக் கீறப்பட்ட ஒரு கோடே அச்சுழியாகக் கையாளப்பட்டு வந்துள்ளதென்றும் சிலர் கூறுவதைக் குறிப்பிடலாம். இக் கருத்திற்கு எத்தகைய அடிப்படையோ ஆதாரமோ கிடையா தென்றும், இதற்கு மாறாகப் பிள்ளையார் சுழி என்பது மாபெரும் தெய்வப் பொருளைத் தன்னகத்தே அடக்கிக் கொண்டிருக்கும் ஒருதிரு வரிவடிவமென்றும் திரு. M. **கலைமகா அனந்தர்**

அவர்கள் விளக்கமான ஆராய்ச்சி அனுபவச் சான்று களுடன் இந்நூலில் எழுதியுள்ளார்.

இதுகாறும், ''பிள்ளையார் சுழி'' சைவர்கட்கு உரியது, அவர்களால் மட்டுமே போற்றப்பெறுவது என்று பலரும் எண்ணியிருக்க, இது மனித இதயத்திலே எழுந்தருளி யிருக்கின்ற இறைபொருளின் திருவுருவ வரிவடிவமென் றும், ஆதலின், இது மெய்ம்மதங்கள் யாவும் உள்ளவாறு அறிந்து போற்றுதற்குரிய சிறந்த அடையாளமென்றும், தெய்வ சம்பந்தம்பெற்ற அரியபெரிய பேற்றுளர்களின் செயல் அனுபவத்தில் இஃது உணரக்கிடக்கின்றது என் றும் இப்போது வெளிவந்துள்ள இந்த விளக்க நூல் கூறு கின்றது. 'பிள்ளையார் சுழி' போடுவது குருட்டு நம்பிக்கை என்ற அறியாப் பிதற்றுரை இனியேனும் தலைகாட்டாது மறைய இவ்விளக்கம் பெரிதும் துணைபுரியும்.

இன்னும், 'பிள்ளையார் சுழி'போடு ஒன்றிய தொடர்பு கொண்ட 'சைவ மெய்ந்நெறி'யைப் பற்றியும் சிறந்தொரு கட்டுரை அனந்தர் அவர்களால் இந்நூலின்கண்ணே சேர்க்கப்பெற்றுள்ளது. 'சைவ மெய்ந்நெறி'யைப் பற்றிய இத்தெளிவுரையினை மேற்போக்காகப் படிக்கிறவர்கள், திருக்கோயில் முதலிய வெளிமுக வழிபாட்டினையும், சாத்திர புராண முதலிய வேத கலையினையும் ஆசிரியர் வேண்டாமென்கிறாரென்று எண்ணினாலும் எண்ணிவிடு வர். இதனை, ஆழ்ந்து நின்று ஊன்றிக் கற்கின்றவர்களோ, 'அரிது அரிது என்ற மனித தேகத்தைப் பெற்றுள்ள நாம் அழியாத மெய்யான வீட்டிற் குடியேறி நீடூழி வாழவே இவ்வுலகுக்கு வந்தோம்; ஆதலின் நாம் நாட் போக்காது மேற்கூறிய வெளிமுக வழிபாட்டுப் படிகளைக் கடந்து அறிந்த குருகோமான்களின் திருவடித் துணை பெற்று மேலாம்பரமான பயன்தரும் அகமுக வழிபாட்டி னால் அழியா வீட்டினை விரைவில் அடைய வேண்டும்'

என்பதே இவரது கருத்தென எளிதில் உணர்வார்கள். இன்னும், "இவ்வுடல் உள்ளபோதே மேற்கூறிய வீட்டினைப் பெறாதவர்கள், பிராணிகளிடத்திலேயும் பிருதிவி முதலிய உலகங்களிடத்திலேயும் தேகமெடுப்பர்; ஆகையால் இப்போதே முயல வேண்டும்" என்று இந்நூலில் எடுத்துக் காட்டப் பெற்றுள்ள வேதோபநிடத எச்சரிக்கையும் நினைவு கூர்தற்குரியது. மேலும், எதற்கும் ஆசான் வேண்டியிருக்க, மனிதப் பிறவியின் குறிக்கோளைப் பெறச் செய்யும் மேலான இந்நெறிக்கு மட்டும் ஆசான் இல்லாமலா முடியும்?— ஆகலின், மெய்க்குரு பெருமானைத் தேர்ந்து அவர் திருவடித் துணை பெற்றே நடந்தறியா இப்பெரு வழியில் நடந்து, பிறவிப் பயனைப்பெற வேண்டுமென்ற கருத்தே இங்குப் பெரிதும் வற்புறுத்தப்பெற் றுள்ளது.

இந்நூல், தமிழ் உலகத்திற்குப் பெரும் பயன் அளிக்கத்தக்க மெய்யறிவு விளக்க விரிவுரையாக அமைந்திருப்பது பாராட்டத்தக்கது. வெறும் நூலாராய்ச்சிக்கு எட்டாத அரும்பெரும் ஞானோபதேச உண்மைகளை இனிய தமிழ் உரைநடையில் கற்றோரும் மற்றோரும் எளிதாக உணரும்வண்ணம் திரு. **கலைமகா அனந்தர்** அவர்கள் விளக்கிக் கூறியிருக்கின்றார். சைவசித்தாந்தப் பெருநூல்களைக் கற்று ஆய்ந்து தெளிந்த அருந்தவச் சீலராகிய இந்நூலாசிரியரைச் சைவ உலகம், அவருடைய பூர்வாச்சிரமப் பெயராகிய மா. *து*ரைசாமி முதலியார் என்று சொன்னால் நன்கு அறியும். சென்னை அரசாங்கத்தின் ஊர்ப் பாதுகாப்புத் துறையில் கைவிரல் ரேகை ஆராய்ச்சி நிபுணராக இருந்து ஓய்வு ஊதியம் பெற்றுவரும் இவரைப் பல ஆண்டுகளாக நான் நன்றாக அறிவேன். இவர் 'மங்கையர்க்கரசி அல்லது பாண்டிமா தேவி', 'நால்வர் சரித்திரம்' முதலிய நூல்களை எழுதி வெளியிட்டவர். இவர், பாம்பன் குமரகுருதாச சுவாமிகளின் சீடராக அவரோடு

பதினைந்து ஆண்டுகட்டு மேலாக நெருங்கிப் பழகி, அவர் வெளியிட்டுள்ள பரிபூரணானந்தபோதம் முதலிய நூல்களின் வெளியீட்டிற்குப் பெரிதும் துணைபுரிந்தவர். திரு. வி. கலியாணசுந்தர முதலியார் முதலிய சமய நூலாராய்ச்சியாளர்களோடு நீண்டகால நட்புரிமை பூண்டவர். சைவ சித்தாந்த மகா சமாஜத்தில் தொடர்புகொண்டு சமாஜ வெளியீடுகளில் ஈடுபாடுபெற்றவர். சென்னைச் சைவ பரிபாலன சபை, சென்னைப் புதுப்பாக்கம் சிவசுப்பிரமணிய பக்தஜன சபை இவைகளில் பல்லாண்டு செயலாற்றியவர். இவர், இப்போது இக் கலியுகக் கடைக்கோடி காலத்தில் மக்கள் உய்வான் வேண்டித் திருஅவதாரம் செய்து மெய்ஞ்ஞானப் பேரரசு செலுத்திவரும் தனித் தலைமைச் சாலைத் தெய்வ நாயகத்தின் திருவடிகளை அடைந்து பணிந்து, மாற்றிப் பிறக்கும் பெரும்பேறு அருளப்பெற்றுள்ளார், ஆகலின், இந்நூல் யாவராலும் நன்கு கற்றறிதற்கு உரியதாகும்.

இந்நூலினை அச்சேற்றி வெளியிட்ட தமிழன்பர் திரு N.T. விஸ்வநாதம் பிள்ளை, B.A., B.L., அவர்களுடைய பேருதவி மக்களால் பெரிதும் போற்றற்குரியது.

தெய்வ நலம் பேணும் இந்நூல் யாவர்க்கும் பெரும் பயன் தரும்படியாக நின்று நிலவ, எல்லாம்வல்ல எமது தெய்வத் தனித் தலைமைப்பிரான் அவர்களின் திருவடிகளை இறைஞ்சுகின்றேன்.

டி. ஏ. வி. நாதன்

உ

ஆதியே துணை

---

# பிள்ளையார் சுழி

இந்தத் தமிழ் நாட்டில் இருக்கின்ற நூல்களின் தலைப்பில், ஒரு சுழியோடும் கூடிய கோடுடைய (உ) இந்த எழுத்தைப் பெரும்பாலும் பார்க்கலாம். எழுத்தறிவிக்கும் முதற் சுவடியிலும் இந்த எழுத்து இருக்கின்றது. இது, ஆதிகாலத்திலிருந்து எழுதிக் கொண்டு வருவது. ஒரு சிறு சீட்டிலும் இதை முதலில் எழுதும் பழக்கம் இருந்து வருகிறது. இவ்வெழுத்து, கடவுளின் அறிகுறியாகவும், கடவுளை வணங்கும் அடையாளமாகவும் இருக்கின்றது. இது, **பிள்ளையார்சுழி** என்று சைவ தெய்வப் பெயரால் விளங்குவதால், பிற மதத்தினர் இப்போது இதை அனுசரிப்பதில்லை. இது, மெய்யான எல்லா மதங்கட்கும் உரியதும் ஏகநாயக இறைவனைச் சார்ந்ததுமான ஒரு வரிவடிவம் என்று அறியப் பெருமல் இருக்கிறது.

## பிள்ளையார் சுழியின் வேறு பெயர்கள்

இந்த எழுத்துக்கு, மற்ற எழுத்துக்களுக்குப் பெயரிட் டிருப்பதுபோல் இன்ன பெயரெனக் கூறும் ஒலி வடிவம் இல்லாததால், இது, பேசா எழுத்து மோன எழுத்து ஊமை எழுத்து என்று சொல்

லப் பெறுகிறது. இது, ஒப்பற்ற ஒரு தனி எழுத் தாகையால், ஓரெழுத்து என்றும், வட மொழியில் ஏகாட்சரம் என்றும் சொல்வதுண்டு. இதன் வரி வடிவத்தில் சுழி தலைபோலவும், கோடு கால்போல வும் தெரிவதையும், இது வந்ததன் காரணத்தையும் நோக்கி, இதனைச் சாகாத்தலை என்றும், வேகாக்கால் என்றும், ஏழ்நிலைக் கம்பம் ஏழ்நிலைக் கோபுரம் என்றும் சொல்லுவர். கோயிற் கோபுரங்களும் இத னையே குறிப்பனவாகும். 'ப்ரணவோ தனு:' - 'பிரணவம் வில்வடிவானது' என்று **முண்டகோபநிடதம்** என் னும் வடமொழி வேதாந்த நூல் மொழிகின்றபடி, இந்தச் சுழியும் கோடும் பிரணவ மென்னும் ஓங்கார எழுத்தின் வடிவத்தை ஒத்திருக்கிறது. பிள்ளையார் என்கிற தெய்வ உருவமும் அவ்வாறே காணப் பெறு கிறது. இன்னும், பிள்ளையாரை முன்னே வணங்குவது போல், இவ்வெழுத்து முதலில் எழுதப் பெறுவதால் **'பிள்ளையார் சுழி'** என்றொரு பெயரும் இதற்கு ஏற் பட்டது. இதன் திருப் பெயர்கள் இன்னும் பலவாக இருக்கின்றன.

## பிள்ளையார் சுழியின் வரலாறு தெரியாதாரின் பேச்சு

இந்த மோன எழுத்தை எதற்கும் முதலில் எழுதும் பழக்கம் இப்போது மிகுதியாக நழுகிவிட்டது. இது இப்படி நழுகியதற்குக் காரணம் மக்களிடம் தெய்வ நம்பிக்கை குறைந்து வருவதும், இந்த எழுத்து உண் டான மூல காரணத்தை அவர்கள் அறியாமையுமே யாகும். எடுத்துக் காட்டாக, ஒருவர்,

"சங்க காலத்தில் தமிழ் அகத்தில் விநாயகர் வணக்கமோ, பிள்ளையார் வணக்கமோ கிடையாதென்றும், ஆனால் '**பிள்ளையார் சுழி**' பல ஆண்டுகட்கு முன்னரே இருந்திருக்கிற தென்றும், இதற்குக் காரணம் முன்பு எழுதிய புலவர்கள் எல்லாம் பனை ஓலைகளில் எழுத வேண்டி யிருந்த தென்றும், பனை ஓலை அதிக ஈரமாக இருந்தாலும் அதிகம் உலர்ந்திருந்தாலும் எழுத்தாணி அதிகக் கூராக இருந்தாலும் கூர் மங்கி யிருந்தாலும் எழுத வராதென்றும், எனவே பதமாக இருந்தால் தான் எழுத இயலு மென்றும், அப்படி ஓலை பதமாக இருக்கிறதா என்பதை அறியவே பிள்ளையார் சுழியைப் போட்டனர்" என்றும் விவரித்துப் பேசியதாக அறியக் கிடக்கிறது.

இந்தப் பேச்சைக் கேட்கிறவர்களுக்கு, "ஓலை பதமாக இருக்கிறதா என்று முதலில் எழுதிப் பார்த்துத் தான் யாரும் எதையும் எழுதுவதோ ? அப்படியானால், ஒரு நூல் ஒரே மூச்சில் எழுதி முடியுமா? நூலை விட்டு விட்டுத் தொடங்கும்போ தெல்லாம் அப்படிப் பிள்ளையார் சுழியை எழுதிப் பார்த்ததாகத் தெரிய வில்லையே : எழுதுகிறவர்கள் எல்லோரும் எங்கும் ஒரே மாதிரியாகத் தான் எழுதிப் பதம்பார்க்க வேண்டு மென்று எந்த இலக்கண நூலில் சட்டம் விதித் திருக்கிறது?" என்ற கேள்விகளும் சந்தேகங்களும் உண்டாகக் கூடும்.

இன்னும், 'சங்க காலத்தில் பிள்ளையார் வணக்கம் கிடையாது. ஆனல் பிள்ளையார் சுழி பல ஆண்டுகட்கு முன்னரே இருந்திருக்கின்றது' என்று பேசிய இவர்

பேச்சினுலேயே, இந்தப் பிள்ளையார் சுழிக்கும் விநாய கருக்கும் எவ்வித தொடர்புமில்லை என்றும் ஆகிறது. தெய்வச் சிறப்பு வாய்ந்த செந்தமிழ் மொழியின் உயர்வு பற்றிப் பேசவந்த இவர், பிள்ளையார் சுழியைத் தூஷண மாகப் பேசி ஒதுக்கிவிட்டது, தலையை வெட்டி எறிந்து விட்டு முண்டத்தை வைத்துக்கொண்டு முத்தமிடுவது போலிருக்கிறது. தமிழின் தலைமை எழுத்தெனச் சிறப் புற்றிருக்கும் 'பிள்ளையார் சுழி'யானது வந்த வழியினைத் தெரியாத இவர், அதன் உன்னதத்தை அறிந்தவர்க ளிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளாமல், அது பற்றித் தாறுமாருகப் பேசி, அறியாத இளம் பிள்ளைகளையும் தவருன வழியில் இழுக்கின்ருர். 'தமிழை ஆக்கித் தந்த முதலாசிரியர் முதல் இதுவரை வந்த வந்த நரகர், மக்கள், தேவர் ஆகிய யாவர்க்கு மில்லாத புத்தறிவு ஒன்று எமக்குப் பூத்திருக்கிறது, பாருங்கள்' என்று பறை சாற்றுகின்றதுபோ லுள்ளது இவரது மேடைப் பேச்சு. அந்தோ இந்த நிலைமைக்கும் வந்து விட்டதே நம் தமிழகம்!

இனி, மெய்யுணர்ந்த நிறைமொழி மாந்தர்களின் மறைமொழி முதலிய பல வழியானும், இந்தத் தெய் வீகத் தலைமை எழுத்தின் பெருமையை இயன்ற அளவில் அறிந்து கொள்வது மக்களைப் பொறுத்ததொரு செயலாகும்.

## திருக்குறளும் இறை திருவடியும்

தமிழ் நாட்டிலே, இதுநாள்வரை சிறிதும் சிதைவு படாது நின்று நில்வும் பெருநூல் திருக்குறள். இது, சைவர்

வைணவர் சமணர் ஆகியோர்களால் தங்களுடையது தங்களுடையது என்று கொண்டாட உள்ளது. அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நால்வகைப் பொருளை யும் தொகுத்தும் விரித்தும் தன்னகத்தே திரட்டி வைத்துள்ள தமிழ்மறை இஃது ஒன்றே. இதனுள் வாலறிவன் நற்றாள், மலர் மிசை ஏகினான் மாணடி, வேண்டுதல் வேண்டாமையிலான் அடி, தனக்குவமை இல்லாதான் தாள், அறவாழி அந்தணன் தாள், எண் குணத்தான் தாள், இறைவன் அடி என்றெல்லாம் கடவுள் வாழ்த்தில் கூறியருளி, அத் திருத்தாளினைச் சேருதல் தொழுதல் வேண்டு மென்றும், அவ்வாறு செய்வோர் நிலமிசை நீடு வாழ்வார், அவர்கட்கு யாண் டும் இடும்பை இல, அவர் மனக் கவலையை மாற்று வர், அறவாழியோடு பிறவாழியும் நீந்துவர், பிறவிப் பெருங்கடல் நீந்துவர் என்றும், அதனைத் தொழாரது தலை குணமற்ற தாவதோடு அவர் கற்றும் பயனற்றவர் என்றும் தீர்ப்புக் கூறுகின்றார் திருவள்ளுவ நாயனார். இத் தெய்வப் புலவர் எடுத்துக் கூறும் நற்றாள், வினையின் நீங்கி விளங்கிய அறிவினைப் பெற்று முத்தர்களாகவும் குரு பெருமான்களாகவும் இருப்பவர்களுடைய திருவடி களைச் சார்ந்து, அப் பெரியோர்களுடைய பெருங் கருணையாற் பெறுகின்ற 'குருபாதம்' என்று சிறப் பித்துச் சொல்லப்பெறும் இறைவனுடைய திருவடி யாகிய 'நடனபாத' மே என்பது, அதனைச் சார்ந்தார் எய்துவதாகக் கூறும் நற்பேறுகளால் இனிது சித்தித்த தாகிறது. இத் திருவடியே இறைவனுடைய திருமேனி என்பது அறிந்தவர்களின் அனுபவம்.

இனி, திருவள்ளுவ தேவரைப் போன்று இவ்வுல கம் உய்ய எழுந்தருளி இருந்தவர்களும் இருக்கின்றவர்

களுமாகிய பெருந்தவப் பாரவான்கள், தூலவிழிக்கு எட்டப்படாத சூக்கும காரண உலகங்களை நேரில் கண்டு ஆட்சி செலுத்தியவர்களும் செலுத்துகின்றவர்களுமாகிய தேவ மன்னுதி மன்னர்கள், திருமறைகளை அருளியவர்களும் அருளுகின்றவர்களுமாகிய நிறைமொழி வள்ளல்கள் ஆகிய இவர்களுடைய ஆணையிற் கிளந்தவைகளும் கிளக்கப் பெறுகின்றவைகளுமாகிய அரிய பெரிய அருளிச் செயல்களும் இங்கு ஆய்தற்குரியன.

## தெய்வத் திரு நடனம்

கடவுள் உயிருக்கு உயிராக நின்று இந்த அண்ட சராசரப் பொருள்கள் அனைத்தையும் நடத்தவில்லையானால், படைத்தல் காத்தல் அழித்தல் முதலிய தொழில்கள் முறையாக இவ்வுலகில் நடைபெறமாட்டா. எல்லாவற்றிற்கும் மூலகாரணமான அசைவு கடவுளிடமிருந்தே பிறக்கின்றதனால்தான், 'அவன் அசையின் அணு அசையும்,' 'அவனன்றி ஓர் அணுவும் அசையாது' என்றெல்லாம் கடவுளைக் குறித்துப் பேசப் பெறுகின்றது. இந்த ஆதி அசைவானது, ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் உள்ளதாகலின், இது, அறிந்த மெய்ஞ்ஞானியர்களுக்கு எப்போதுமுள்ள சொந்த அனுபவமாகவும், மற்றவர்களுக்கு வெறும் பேச்சாகவும் இருக்கிறது. இந்த அசைவே தெய்வத் திருநடனமாம்.

## தெய்வ நடனமும் ஐந்தொழிலும்

இறைவன் ஐந்தொழில் செய்வதாக அமைத்துக் காட்டப்பெற்றிருக்கின்ற நடராஜ வடிவத்தில், உடுக்கை

ஏந்திய திருக்கரத்திலே படைத்தல் தொழிலும், அமைத்த திருக்கரத்திலே காத்தல் தொழிலும், அக்கினி ஏந்திய திருக்கரத்திலே அழித்தல் தொழிலும், ஊன்றிய திருப்பாதத்திலே மறைத்தல் தொழிலும், தூக்கிய திருப்பாதத்திலே அருளல் தொழிலும் செய்தருளுவதாகக் குறிப்பிட்டிருக்கிறது. இதனைத் திருவதிகை - **மனவாசகம் கடந்தார்**, தாம் ஆக்கி அருளிய உண்மை விளக்கமென்னும் சித்தாந்த சாத்திரத்தில்,

"தோற்றந் துடியதனிற் றோயுந் திதியமைப்பிற்
சாற்றியிடு மங்கியிலே சங்காரம்—ஊற்றமா
யூன்று மலர்ப்பதத்தி லுற்ற திரோதமுத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு"

என்று உரைத்தருளினர். இது, அந்த ஆதி அசைவைத் தூல நடனமாகச் சித்திரித்துக் காட்டியதாகும். மெய்ந் நாவேந்தராகிய **அப்பர் சுவாமிகளும்,**

"குனித்த புருவமும் கொவ்வைச்செவ் வாயிற்
குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போன் மேனியிற்
பால்வெண் ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற் பாதமும்
காணப் பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவ தேயிந்த
மானி லத்தே"

என்று எழுத்து ஓவியம் ஒன்று எழுதிக் காட்டியிருக்கின்றார்.

## தூல சூக்கும காரண நடனம்

வீர சைவ மேதையாகிய **திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள்**, எண்பத்து நான்கு இலட்ச விதமாகச் சொல்லப்பெறும் உயிர்களின் உடற்பேதங்களில், இறைவன் இருந்து தொழில் புரிவதே தூலத் திருநடன மென்பதை,

“ நாலிருபத் தொருநான்கை நண்ணிலக்க விதமா
நவிலுடலில், தொழில் இறைவன்
புரிவது தூலமதாம் ”

என்றும், இனி தெய்வம் நீக்கமற நின்று தூல உடலின் கருவிகள் ஒவ்வொன்றிலும் தொழில் புரிதல் சூக்கும நடன மென்பதை,

“ தூல உடல் அவத்தைகளிற் கருவிகளொவ்
வொன்றில்
தொழில்புரிதல் சூக்குமமாம் நீக்கமற நின்றே ”

என்றும் அருளிச் செய்துள்ளார்.

இனி, காரண நடனம் தூல சூக்குமங்களைப்போல் கேட்டறிவ தன்றென்றும், அது சமாதி நிலையில் அதாவது தேவநிலை எய்திய ஒருவருடைய சுவானுபூதியில் மிளிர்ந்தொளிரும் பரவத்துவினது திருநடன மாகலின், அது அகக்கண் கொண்டு நேரிற் கண்டறிவதென்றும், அங்ஙனம் அறியுங்கால் திருவடி இன்னதென வெளியாகுமென்றும், அதுவே ஆனந்தப் பேறென்றும், அதன் அனுபவத்தால் முன்னிருந்த துன்பங்களெல்லாம் அகன்றிடும் என்றும் ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் அவர்களே தமது ‘**பஞ்சதிகார விளக்க**’ மென்னும் நூலிற் கூறியருளி

னார். இந்தக் காரண நடனபாதமே "திருவடி அல்லது பிள்ளையார் சுழி" என உணரக்கிடக்கின்ற தென்பதை இங்கே காண்போம்.

## உயிர்க் கூத்து

இறைவனுடைய இந்தத் திருநடனம், நம்முடைய உடம்புக்குள்ளாகவே நிகழ்கின்றது என்று நமக்கு உணர்த்த வந்த **நிஜானந்த போத ஆசிரியர்,**

"நெடிதான தாரைஒன்று சங்கி ரண்டு
நின்றூதும் திருக்கோயில் அறையி னுள்ளே
வடிவாக ஒருபாதம் ஆடி நிற்கும்
மற்றொருகால் தூக்கிநின்ற சிவனைக் கண்டோர்
கடிதாக உடல்வெறுத்துத் தவங்கள் செய்து
கண்மூடிப் பூசித்துக் கலங்கு வாரோ
படிமீதில் திருக்கோவில் நதிகள் தேடிப்
பரிதவித்து உழல்வதென்ன பகர்ந்தி டீரே."

என்று அருளிச் செய்ததில், படிமீதில் திருக்கோயில் என்று புறக்கோயிலைப் பிரித்துப் பேசி, அங்குள்ள நடராஜ திருக்கோலத்திற்கு ஆதாரமாக உள்ளப் பெருங் கோயிலினுள் சிவபெருமானாகிய இறைவன் ஒருபாதம் ஆடி நிற்பார், மற்றொருகால் தூக்கி நிற்பார் என்று விளக்கியிருக்கின்றார். **பேரூர்ச் சாந்தலிங்கப் பெருந்தகை,**

"இவை செய்தால் மாற்றலாம் பிறப்பிறப்பினை
நெஞ்சமே, மன்றுளாடிய தாளும் தோற்

றும் உள்ளொளிக் குள்ளொளியாய்,
அதைத் தொழுது வாழ்தலுமாமே.''

என்றதால், கனக சபைக்கண் நடிக்கின்ற சிவனது திருவடியும் உயிராகிய உள்ளொளிக்கு உள்ளொளி யாய்த் தோன்றும், அத் திருவடியைத் தொழுது அவ் விடத்து எக்காலமும் அழிவின்றி வாழவுங் கூடுமென் றுரைத்தருளினர். **சச்சிதானந்த விளக்கம்** என்ற நூலில்,

" கோடி பல நூலறிவு வேதமுறை
பேசினும் குருபாதம் வெளியாகுமோ ''

என்று அதன் நுண்ணிய மாட்சி பேசப்பெற் றுள்ளது. மேலும், **திருப்போரூர்ச் சிதம்பர தேவர்,**

" திருவடியிங் கேதென்னில் திரோதம்அரு ளென்னும்
இருவகையும் இறைபாதம் இவைகீழ்மேல் நோக்கி
இருந்திடுங்கீழ் நோக்கியதா ளெய்துறுமா ருயிர்க்கு
வருவினையொப் பாக்கிமல பரிபாக மாக்கும்
மற்றதுபே ரானந்த வாரிதரு மிவைகள்
பொருவிலுயிர்ச் சிரசின்மிசைப் பிரிவறவே தங்கும்
பொற்சபையின் நின்றநிலை திட்டமது காணே.''

என்றருளிச்செய் துள்ளார். தேவர் அவர்கள், இந்தத் திருவடி உயிர்ச்சிரசின்மிசை தங்கியிருக்கிறது என்றரு ளிச்செய்தது நமக்குப் பேருதவி புரிவதாயிற்று. இதுவே **பிள்ளையார் சுழியின்** மூலாதாரம் என்று மீண்டும் உணரும்படியாகிறது. **வடலூர் வள்ளற்பிரான்** அவர் களும்,

" ஏகாக் கரப்பொற் பீடத்தென்னை
யேற்று ஜோதியே "

என்றும்,

" என்னுளத்தே சுத்தநடம் புரிகின்ற
சித்தசிகா மணியே "

என்றும் அருளினர். **ஏகாக்கரமே பிள்ளையார் சுழி. நம்மாழ்வார்** அருளிச் செய்துள்ள திவ்விய பிரபந்தத் திருவிருத்தத்தில்,

"கமழ்தல மொன்றே நிலமுழு தாயிற்று,
ஒரு கழல்போய் நிழல்தர எல்லா
விசும்பும் நிறைந்தது"

என்று நவிலப்பெற் றுள்ளது. இன்னும், தருமபுர ஆதீனப் பத்தாவது பட்டம் **சிவஞான தேசிக சுவாமிகள்,**

" அசபா நடத்தை அண்டத்தி லுள்ளபடி பிண்டத்தில்
நான்காண அருளுவாய் தியாகேசனே "

என வேண்டி நின்றனர். இனி வந்த வந்த செம்மல்களெல்லாம் திரண்டுருவெடுத்து எழுந்தருளியுள்ள கர்த்தராகிய எமது குருபிரான்,

" கொழுமுனையாங் கதிர்முனையி லாடும் பாதம்
கோடானு கோடிமறை புகழும் பாதம்

தளிரிலைபூங் காய்பழமாய்ச் சொரிந்த பாதம்
சகலவுயிர் ஜீவனிலும் ஆடும் பாதம்
பழுதணுகா தாலயத்தின் நடன பாதம்
பக்தருளக் கோயிலுளம் பூத்த பாதம்
நழுகுமனத் தவர்க்கதுவே நாச பாதம்
நம்பினவர் குடிதிருவங் கேறும் வாழ்வே."

என்றும்,

" சுழிசுழித்தொரு கிழிழுத்ததில்
சூழுலகம தேழதாய்
வழியதாகவே தன்னிலேயது
வாழுமேநபு சேறென
அழிவிலாதவன் ஏழ்புள்ளியொன்றாய்
ஆக்கியேயதைத் தூக்கிட
ஆனதேவிண்ணு லகமேழிது
அதுவேதன்னில மானிதம்
தெளிவதாகவே யேழ்நிலைக்கம்ப
மென்றுவுன்னிற்றெ ளிந்திட
சிரஞ்சீவியென்றோர் பட்டமும்வந்து
செல்வசம்பத்துண் டாகுமே
பழிகொலைமுதற் பாவநாசமாம்
பாதமேமனம் பாவித்தால்
பாதுகாத்துன்னை ரக்ஷித்தேத்தியே
பரமபதத்திற் சேர்க்குமே."

என்றும் இதனுண்மையை விரிவாக அருளிச் செய்துள்ளார்.

## திருவடிச் சிறப்பு

இவ் விருபாதங்களின் அளவிலாச் சிறப்பினை எடுத்தோதிய உடலறிவிளக்க நூல் ஆசிரியர்,

"காணுமறு சுவையொளித்த தலமு மங்கே
கவிக்கிசைகள் எழுந்தவிடந் தானு மங்கே
ஊனிலெழுந் துரைத்தவிடந் தானு மங்கே
உம்மென்று சொன்னவிடந் தானு மங்கே
தோணுமயிர்ப் பாலநெருப் பாறு மங்கே
சுடரொளியின் றரிசனங்கள் காண்ப தங்கே
வேணுமென்ற பாக்கியங்கள் பெறுவ தங்கே
மெய்ஞ்ஞான அறிவிருந்த விடமு மங்கே."

"நந்திகொலு விருந்தவிடந் தானு மங்கே
நற்கமல மாயிரத்தெட் டிதழு மங்கே
அந்திசந்தி பூசையனுட் டான மங்கே
அறுத்தடைத்த வாசல்சிவ யோக மங்கே
மந்திரமும் சாஸ்திரமும் பிறந்த தங்கே
மனுநீதி குலவரவு தானு மங்கே
செந்தியொளி சிவன்சிங்கா தனமு மங்கே
சிறந்தஇரு பாதமடை யாளமுரைத் தோமே."

என்று உரைத்தருளினர். மேலும், சைவசமயாச்சாரியராகிய **திருநாவுக்கரசு சுவாமிகள்** தங்கள் தேவாரத் திருமுறையிலே,

"உருவிரண்டும் ஒன்றோடொன் றொவ்வா அடி
உருவென் றுணரப்படாத அடி"

என்றும்,

"நடுவாய் உலகம் நடாய அடி
செறிகதிருந் திங்களுமாய் நின்ற அடி
தீத்திரளாய் உள்ளே திகழ்ந்த அடி"

என்றும் அருளிச் செய்ததில், 'திருப்பாதங்களின் உருவிரண்டும் ஒன்றேடொன்று ஒவ்வாதன; அவை உருவெனினும் மெய்யுணர்வு அனுபவத்தில் உருவென்று உணரப்படாதன; நடுநாயகமாக நின்று உலகத்தை நடத்துகின்றன; சூரியனுகவும் சந்திரனுகவும் நிற்கின்றன; சோதிப் பிழம்பாக உள்ளே விளங்குகின்றன' என்று அவற்றின் சிறப்பினை விளக்கியருளினர்.

## மூல அசைவும், மூல ஓசையும்

இதுவரை எடுத்துக்கூறிய வேத வாக்கியங்களால் தெய்வத் திருநடனமே இவ்வுலகம் இயங்குவதற்கு ஆதாரமாக இருக்கிறதென்று உணர்த்தப்பெற்றது. 'அவன் அசையின் அணுவசையும்' என்றபடி இவ்வுலக அசைவுக்கு அசைவாயிருப்பதே தெய்வத் திருநடனமாகும். இந்நடனம் நிகழவில்லையானல் இவ்வுலகமே இல்லையாம். இந்நடனத்தினுலேயே சிருஷ்டி திதி சங்காரம் முதலிய தெய்வத் தொழில்கள் நடைபெறுகின்றன. அசைவுக்கு அசைவாக இருக்கும் இந்தத் தெய்வ அசைவென்னும் திருநடனத்திலிருந்து ஒரு சத்தம் பிறக்கின்றது. இந்தச் சத்தம் அல்லது நாதமே இறைவனிடத்திலிருந்து உண்டாகிற முதற்பொருளாகும். நெஞ்சறி விளக்கமும்,

"இரவுடன் பகலுமான இருபத நடனங் கண்டால்
சிரமதில் நாகைநாதர் சிலம்பொலி கேட்கும்நெஞ்சே"

என்று கூறியது.

இந்த நாதத்திலிருந்தே உலகமெல்லாம் விரிக்கப் பெறுவதால், ஸ்ரீ நடராஜப் பெருமானுடைய திருக்கரத்தின் உடுக்கையிலிருந்து உண்டாகும் ஒலியினால் உலகம் உண்டாகிறது என்கிறோம்; இவ்வாறே, அவரது திருக்கரத்தில் ஏந்தியுள்ள நெருப்பினால் இந்த உலகம் அழிக்கப்படுகிறது என்றும் சொல்லுகிறோம்.

'**தேவர்கள் பிறப்பதற்கு முன்பே பிரமத்தினின்றும் வாக்குத் தோன்றியது; அதன் முதலிலேயே பிரணவம்: இந்தப் பிரணவமே இலட்சியப் பொருள்**' என்று **கடோபநிஷதமும்** கூறுகின்றது.

## மூல ஓசையும், மூல வடிவமும்

பொருள்களின் குண வகைகளை ஆய்ந்து அறிந்தவர்கள் ஓசைக்கு உருவமிருக்கிறது என்று கண்டார்கள். ஓசைக்கு உருவமில்லையானால், ஒருவர் பேசுவதை ஒரு தட்டில் பதியவைத்துக்கொண்டு அதை மீண்டும் மீண்டும் எப்படிக் கேட்க முடியும்? இது எல்லோரும் நேர்முகத்தில் பார்க்கவும் கேட்கவும் இருக்கிறதல்லவா? ஆனால், ஓசையினால் உண்டாகின்ற எழுத்தின் வடிவம் இன்னதென்று தெரிவதில்லை. ஆயினும், சகல பாஷைகளையும் அறிவிக்கக்கூடிய எழுத்தாகிய வரிவடிவமும் இருக்கிறதென்று தெரியவருகிறது. எல்லாப் பாஷைகளுக்கும் ஆதாரமாகிய தாய்ப்பாஷையை அறிந்தவர்களே, எல்லா வடிவங்களுக்கும் முதலாகிய வரிவடிவத்தையும் அறிகின்றார்கள். ஆகையால், இறைவனுடைய திருநடனத்தில் அவர்தம் திருக்கரத்து உடுக்கையிலிருந்து உண்டாகும் மூல ஒலியின் உருவமே **பிள்ளையார் சுழி** என்று உணரக் கிடக்கிறது.

இன்னும், உலகத்தில் காணப்படுகின்ற பொருள்கள் எல்லாவற்றினுடைய உருவங்களையும் கூர்ந்து பார்த்தால், பொதுவாக அவை வட்டமாகவாவது நீளமாகவாவது அமைந்திருக்கின்றனவென்று தெரியும். இதற்குக் காரணம் எல்லாப் பொருட்களும் ஓரே பொருளாகிய ஓசையிலிருந்தே பிறந்தன வென்பதாம். ஆகையால், எல்லாப் பொருள்களின் வடிவமும் இந்தப் **'பிள்ளையார் சுழி'**யின் வடிவத்திற்கு வேருக இல்லை என்று மீண்டும் கூறுவோம்.

## விந்துநாத சத்திசிவமே பிள்ளையார் சுழி

'நாதம் கோடு வடிவம், இது சிவம். நாதத்திற்குப்பின் அதனை அடுத்துத் தோன்றுவது விந்து. விந்து புள்ளி வடிவம். இது சக்தி'. கடவுள் என்னும் பரமசகசிய வத்துவினின்றும் முதலில் தோன்றும் இந்த விந்து நாதம் என்னும் தத்துவங்களின் இணைப்பே **பிள்ளையார் சுழி.** இன்னும், அணுதிமூலப் பொருள்களான சிவமும் சக்தியும் ஒன்ருகக் கலந்துள்ள நிலையே **பிள்ளையார் சுழி**யாம். இதுவே இறைவனுடைய திருமேனியுமாகுமென மேலே கூறியது மீண்டும் இங்கு உறுதி செய்யப் பெற்றது. இந்தச் சுழியை இட்டாலே போதும்; இது பிள்ளையார் வணக்கம், சிவசக்தி வணக்கம் அல்லது கடவுள் வணக்கமாக ஆகிறது.

## சிவலிங்கமே பிள்ளையார் சுழி

உயிருக்குள் இறைவன் எழுந்தருளி யிருக்கின்ற பீடம் ஒற்றை வட்டமாகப் பிரகாசிக்கிறது. இப் பீடத்தில் சிதாகாசம் கோளாகார லிங்க சொரூபமாக

நிற்கிறது. இதைத் திருமேனியாகக் கொண்டுள்ளதே இறைபொருள். இதுவே சைவலிங்கம். வட்டமாகவும் நீளமாகவுமுள்ள **'பிள்ளையார் சுழி'**, இந்தச் சிவலிங்கத் திற்கு வேருக இல்லை என்று இங்கும் உணர்த்தப் பெறுகிறது.

## திருவுருவ வரிவடிவங்கள்

இவை அனைத்தையும் கூர்ந்து பார்க்க, நமக்கு இளமையில் பள்ளிக்கூடத்திலே ஆசான் அவர்கள் எழுத்தறிவிக்குங்கால் எழுதிக்கொடுத்த **'பிள்ளையார் சுழி'** என்னும் ஓர் எழுத்தின் விரிவே அண்டபிண்ட சரா சரங்கள் யாவும் என்று தெளியப்பெறும். இதன் விளக் கம் நமக்கு அப்போது தெரியாவிட்டாலும், நம் இகபர வாழ்க்கைக்கு வேண்டிய கல்வி அனைத்தையும் கேட்டுத் தெரிந்துகொள்ளும் பருவம் வரும்போது அவற்றிற்கு விளக்கம் கேட்டுத் தெரிந்துகொள்ளட்டும் என்றே, விளங்காதனவற்றையும் இளமையிலேயே கற்பித்து வைத்தார்கள் நம் முன்னேர்கள். சிறுமதிச் செருக் குடைத் தடித்தனச் சோம்பர்க்கு இது புலனுகாது.

தமிழ் நாட்டிலே எழுந்தருளியிருந்த மெய்ஞ்ஞான மகத்துக்களாகிய காருண்ய பிரான்கள், தங்கட்குப்பின் வரும் மக்கள் புறத்திமிர்கொண்டு வாணுளை வீணுளாக் காது அறநெறியில் நின்று உய்யும்பொருட்டாகவும், அவர்களுடைய அறிவில் மெய்ம் முளையானது எளிதில் முளைத்து ஊன்றும்படியாகவும் தாங்கள் அகக்கண் கொண்டு கண்ட காட்சியனைத்தையும் திருவுருவிலும் வரிவடிவிலும் ஆக்கிவைத்துள்ளார்கள்.

பரத்திற்கு இசைந்த ஒரு திருவுருவமே நடராஜ வடிவம். இவ்வாறு மெய்ப்பொருள் அனைத்தினையும் திருவுருவில் ஆக்கிவைத்த நம் முன்னோர்கள், எல்லா வற்றினுடைய சாரமான திரண்ட வடிவினை, வட்டமும் நீட்சியுமான சுழியோடு சேர்ந்த கோடாக வரிவடிவில் வரைந்து வைத்தார்கள். தமிழ் நாட்டிலுள்ள நூல் களின் தலையில் மாத்திரமே இது பொறிக்கப்பெற் றிருப் பதைப் பார்க்க, தமிழ் மூதாதையர்களுடைய நுண்ணிய அறிவு எத்துணை மேம்பாடானதும் ஒப்புவமையற்றது மாக இருக்க வேண்டுமென்று நன்கு உணரலாம். மெய்ப் பாடுபட் டறிந்தவர்களுக்கே இதன் உண்மை இனிது புலனாகும்.

## மெய்க் கல்வியின் திருவாயிற்படியே பிள்ளையார் சுழி

உலகக் கல்வி, நால்வகைப் பிறப்பு மட்டிலுமே எட்டிப் பேசுவதாகவும், முடிவுள்ளதாகவும், அழிந்து போவதாகவும் இருக்கிறது. பிரமவித்தை என்னும் மெய்க்கல்வியோ, மனம் வாக்குக் கெட்டாத அகண்டா காரமானதாகவும், கலைமகள் இன்னும் ஓதிக்கொண்டே இருப்பதாகவும், சாகாக்கலையாகவும் இருக்கின்றது.

இம் மெய்க்கல்வி, தேவத்திருநாட்டிலிருந்து இறக் கப்பெற்று மெய்ஞ்ஞானியர்களுடைய நாவிலே தீட்டப் பெற்றிருக்கின்றது. மனிதனின் அகமுகத்தி லிருக்கின்ற இப் பிரமவித்தைப் பேராழியில் மூழ்க விரும்புவோர், முதலில் **'பிள்ளையார் சுழி'** என்னும் துறையிலே இறங்க வேண்டி யிருத்தலின், இது அப் பிரமவித்தையின்

நுழை கடவு, அதன் தலைவாயிற் சிகரம் என்றும் பேசப்பெறுகிறது. ஆகையினாற்றான், அகக்கல்வியாகிய பிரமவித்தை என்னும் மெய்க் கல்வியைப் **'பிள்ளையார் சுழி'** என்னும் ஓர் எழுத்திற் சுருக்கிப் புறக்கல்வியாகிய உலகக் கல்வியின் தலையிற் சூட்டப்பெற் றிருக்கின்றது.

இந்தப் **'பிள்ளையார் சுழி'**, அண்டபிண்ட சிறப்புக்கள் அனைத்தையும் தன்னகத்தே அடக்கிக்கொண் டிருக்கின்றதாகலின், இதனை நேரில் கண்டவர்களும், வேதமே உருவெடுத்து வந்த வேதவேதியர்களுமாகிய வானாட்டுச் செல்வர்களின் அடிநிழலிற் படிந்து கேட்டுக்கொள்பவர்களே இதன் உண்மையினை எளிதில் உணர்வர். நிறை செல்வத்தையும் பூரண இன்பத்தையும் நீடூழி கால வாழ்க்கையையும் பெறுவதற்காகவே நாம் மனித உடல் எடுத்து வந்தோமாகையால், இப் **'பிள்ளையார் சுழி'**யையும், இதன் மூலமாக மெய்க் கல்வியையும் கற்பது நம்முடைய முதற்கடமையாகும்.

## தமிழின் தனிச் சிறப்பு

**'பிள்ளையார் சுழி'**, இவ் வுலகில் தமிழ் மொழியில் மட்டுமே உபயோகிக்கப் பெறுகிறது. பிண்டத்திலிருந்து எடுத்துள்ள மெய்யான எழுதா எழுத்தாகிய இந்தத் தெய்வீக எழுத்தினைத் தமிழர்களே பெரிதும் கையாண்டு வருகின்றனர். இன்னும், இந்தத் தலைமை எழுத்தினைப் போலவே மற்றைய தமிழ் எழுத்துக்களும் மனிதனின் அகப்புறத் தோற்றத்தினின்றும் எடுத்து ஆக்கியவை என்பது பேரறிஞர்கள் கண்டு கூறியதும் கூறுவதுமான உண்மையாம். இதனால் தமிழ்மொழி, மெய்யினைக்

கைப்பற்றிய அனுபவத்தில், அம் மெய்யுணர்ந்தோரால் ஆக்கப்பெற்றது என்பதும், அக் காரணத்தினுலேயே இம் மொழி தனித் தலைமைச் சிறப்புரிமை பெற்ற செம் மொழியாய தென்பதும், மற்றைய மொழிகட்கெல்லாம் முன்னே தோன்றிய முதன்மொழி இது என்பதும் விளங்கும்.

இம் மொழிக்குப் பெருமைதேட எண்ணுவோர் பேசுவோரெல்லாம் அழகுக் கழகுசெய்ய எண்ணுவோர் பேசுவோரே யாவர். தமிழின் அழகுக் கழகு செய்யத் தம்மாற் கூடாதேபோக, அங்ஙனம் செய்வதுபோல் காட்டிக் கொள்ளும் சிலர், அதற்கு மாருக இழுக்கமே தேடி இடர்ப் படுகின்றனர்.

## முடிப் புரை

முடிப்புரையாகக் கூறுமிடத்து, இந்த உலகமாகிய அண்ட பிண்டங்கள் யாவும் இயங்குவதற்கு ஆதாரமாக ஒரு மூல இயக்கம் அல்லது அசைவு இருந்தாக வேண் டும். குளத்து நீரிலே ஒரு கல்லைப்போட்டால் அந்தக் கல்லின் தாக்குதல் அலையாய்ச் சுற்றிலுமுள்ள நீரை நெருக்கித் தள்ளிக்கொண்டே போய்க் கரை சேருவது போலவே, மேலே சொன்ன மூல அசைவும் அலையாய்ப் பிரபஞ்ச முழுவதிலும் பரவி விடுகிறது. இப்படியே, நம் உடம்பில் கோவில் கொண்டிருக்கும் கடவுட் பொரு ளாகிய பரம ரகசிய சக்தியின் அசைவும் இருக்கிறது. இதுவே எல்லாவற்றிற்கும் ஆதாரமான மூல அசைவு. இதுவே தெய்வத்தின் திருநடனம் என்பதும். இந்த அசைவால் கருவிகள் கடவப்பெற்று, இந்தத் தூல

உடம்பு இயங்குகின்றது. இந்த மூல இயக்கத்தி லிருந்தே நாதம் என்னும் சத்தம் பிறக்கிற தென்றும், இதன் வடிவமே வட்டமும் நீளமுமான 'பிள்ளையார் சுழி' ஆகிற தென்றும், இப் 'பிள்ளையார் சுழி'யின் துணை யின்றி நாம் ஒன்றும் செய்ய முடியா தென்றும், இவ்வாறு, எல்லாவற்றிற்கும் மூலமான 'பிள்ளையார் சுழி'யைத் தெய்வ நினைவோடு எழுதுவதே கடவுள் வணக்கமாகிற தென்றும், தெய்வ நம்பிக்கை வெற்றி யுடைய அறிஞர்களெல்லோரும் அறிவார்கள்.

ஆகையால், தெய்வ வணக்கத்திற் கென்று தொன்று தொட்டு எழுதிவரும் பழக்கத்திலுள்ள புராதன ஓரெழுத்தாகிய இந்தப் 'பிள்ளையார்சுழி'யினை, மக்கள், தாம் விளங்கிக் கொள்ளாத காரணத்தால் சோரவிடாது, மெய்க் குருகோமான்களின் திருவடித் துணைகொண்டு அதன் உன்னதத்தினை உணர்ந்து கைப் பற்றியும், அதனால் ஈறிலாப் பேரின்பப் பேறு அனைத் தையும் பெற்றும் நீடூழி வாழ்வார்களாக!

வாழ்க தெய்வ நற்றருள் !
வாழ்க தெய்வ நற்றமிழ் !



ஆதியே துணை

# சைவ மெய்ந் நெறி

## காப்பு

ஓர்ஊர் செல்ல நேர்வழி உண்டு
நேர்வழி தவறின் சேர்வதும் அரிதே
சிவபதி யதனுட் சேர்ப்பது குருநெறி
நவமிது வன்று நாலுபேர் சென்றது
என்றே சொல்லுமிச் செவ்வுரை தன்னைச்
சென்று பார்த்துச் செப்புவன்
ஐயன்எம் சாலை ஆண்டவர் அருளால்.

"சைவம் சிவத்துடன் சம்பந்தம் ஆவது
சைவம் தனையறிந் தேசிவம் சாருதல்
சைவம் சிவமன்றிச் சாராமல் நீவுதல்
சைவம் சிவானந்தம் சாயுச்சிய மாமே."

—திருமந்திரம்.

## கடவுள்

இந்த உலகத்தில் உள்ள உயிர்ப் பொருள்கள், உயிரில்லாப் பொருள்கள் எல்லாம் பிறக்கின்றன, இருக்கின்றன, இறக்கின்றன. இவைகளை இப்படி

நடத்துவதற்கு ஒரு கர்த்தர் உண்டென்று தெரிகிறது. இந்தக் கர்த்தர் ஏக நாயகர். முதலும் முடிவும் இல்லாதவர், இறப்பும் பிறப்பும் இல்லாதவர், நம்முடைய வாக்குக்கும் மனசுக்கும் எட்டாதவர், பேரறிவுடையவர், பேரருளும் பெருங் கருணையும் உடையவர், நீதியர், சோதியர், இன்ப சொரூபர், எங்கும் நிறைந்தவர், எல்லாம் வல்லவர். இவரையே **கடவுள், சிவம்** என்கிறோம்.

## சீவர்கள்

உயிர்கள் எண்ணிறந்தன, இவைகள் உடல் பெற்று வாழ்கின்றன. ஆனால், சிற்றறிவும் சிறு தொழிலும் உடையன. இவைகளுக்குள்ள சிற்றறிவும், இவைகளை நடத்துகிற கடவுள் அறிவிக்க அறிவதாயிருக்கிறது. நம்முடைய கை கால்கள் முதலிய உறுப்புக்கள், உயிர் இருப்பதால் செயல் செய்கின்றன. ஆனால், உயிரால்தான், அவைகள் அப்படிச் செயல் செய்வதாகப் பலர் எண்ணுவதில்லை. அதுபோலவே, உயிர்களாகிய சீவர்களும் கடவுள் அறிவிக்க அறிவதாயிருந்தும் அந்தக் கடவுளாலே யல்லவோ அறிகிறோமென்று அறிவதில்லை. ஆகையால்தான், சீவர்கள் **கடவுளை** அறியாது, அம் மாபெரும் பொருளை இழந்து நிற்கின்றார்கள்.

## அண்ட பிண்டங்கள்

மனித உடலில், வெளியிலே உள்ள எல்லாப் பொருள்களும் அடங்கியிருக்கின்றன. மனிதவுடல் பிண்ட மென்றும், இதற்கு வெளியேயுள்ள உலகம் அண்டமென்றும் சொல்லப் பெறுகிறது. அண்டத்திலுள்ள எல்லாப் பொருள்களும் பிண்டத்தில் சுருங்கிய

அளவில் இருக்கின்றன. மெய்யான பிண்டம் மனிதனிடத்தில் மட்டுமே இருப்பதால்தான், மனிதன் மாத்திரம் கடவுளை அறியத் தகுதி உடையவனாக இருக்கின்றான்.

## தேவ உலகம்

கடவுள் நம்முடைய உடலில் இருப்பதால்தான், நாம் கடவுளை நம்முடைய உடலிலேயே அறிய முடிகிறது. நாம் விழித்திருக்கும்போது இந்தத் தூல உலகத்தைப் பார்க்கிறோம். நாம் உறங்கும்போது கனவு உலகம் ஒன்று தெரிகிறது. நாம் இப்போது ஓடி ஆடிச் செயல் செய்து இன்ப துன்பங்களை அனுபவிப்பது போலவே, கனவு உலகத்திலும் செயல் செய்து இன்ப துன்பங்களை அனுபவிக்கிறோம். இது போலவே, கடவுள் இருக்கிற பரிசுத்தமான தேவ உலகம் ஒன்று இருக்கிறது. இதைத்தான், துன்பம் நிறைந்த இந்த உலகத்தில் இன்பமுள்ள தேவ கஜானா எங்கேயிருக்கிறது என்று கேட்டால், 'அது உனக்குள்ளாகவே யிருக்கிறது' என்று அந்தக் கஜானாவைக் கைப்பற்றி அனுபவித்த பெரியோர்கள் கூறியருளினார்கள். பதினாயிரக் கணக்கான சூரியர்கள் பிரகாசித்துக்கொண் டிருக்கின்ற இந்தப் பரிசுத்த உலகத்தில் கடவுள் குடியேறி இருக்கிறாரென்றும், 'இந்தப் பரிசுத்த தேவ உலகத்தை, இப்போதே, இந்த உடல் உள்ளபோதே மனித தேகமெடுத்த எல்லோரும் அடையலா'மென்றும் வேதம் கூறுகிறது.

## உடலெடுத்த பயன் உத்தமனைக் காண்பது

"உடம்பினைப் பெற்ற பயனாவ தெல்லாம்
உடம்பினுள் உத்தமனைக் காண்."

என்பது ஔவைப் பிராட்டியார் அருளிய செவ்விய திருவாக்கு. நாம் நம்முடைய தேகத்தை விட்டபின் கடவுளைக் காணலாம் என்று கூறுவது பழங்கதை. அகமுகமான மெய்ச்சைவ வழிபாடு, தன் பயனை மரணத்திற்குப்பின் அடையும்படி தள்ளி வைப்பதில்லை. இதில் குருட்டு நம்பிக்கை என்பதும் இல்லை. இந்தப் பிறவியில் கடவுளைத் தரிசிக்காதவர், இனிவரும் பிறவியில் கடவுளைத் தரிசிக்கலாம் என்ற நம்பிக்கையுமில்லை.

> "பிரமத்தை அறிந்துகொள்ள இவ்வுடலுள்ள போதே சக்தியுள்ளவனு யிருந்தால், சரீரம் விழுமுன் சம்சார பந்தத்திலிருந்தும் விடுபடுகிருன். இல்லாவிட்டால் பிராணிகளிடத்திலேயும், பிருதிவி முதலிய உலகங்களிடத்திலேயும் சரீரத்தை அடைதற்குரியவனுகின்ருன். ஆகையால், இப்போதே முயலவேண்டும்."

என்று வேதாந்த நூலாகிய கடோபநிஷதம் கூறுகின்றது. எனவே, கடவுளைப்பற்றி அறிந்து கொள்ளாதவர்கள் மனித இனத்தைச் சேர்ந்தவர்களென்று எண்ணத்தக்கவர்கள் அல்ல வென்றும், மனித இனத்திலும் தாழ்ந்த மிருக இனமென்று எண்ணக் கூடியவர்களாக இருக்கிருர்களென்றும், அவர்கள் இறந்த பிறகும் அடிமைகளைப்போல் துன்பப்படுகிருர்களென்றும் சொல்லப் பெறுகிறது.

## எது சைவ மெய்ந் நெறி?

கடவுளைக் காணவேண்டுமென்ற ஆசைமேலிட்டால், அதைப் பூர்த்தி செய்துகொள்வதற்காக அமைக்கப்பெற் றிருக்கின்ற சத்திய பாதையைத்தான் சமயம்

என்று சொல்லுகிறோம். சமய நெறிக்கான அங்கங்கள் பல. கைக்கு மெய்யாகக் கடவுளைக் காட்டிவைக்கிற முக்கிய அங்கங்களே மெய்ந் நெறியாம். கடவுளுக்குச் சிவம் என்று ஒரு பெயர் இருப்பதால் இந்தச் சிவ சம்பந்தத்தினையே சைவம் என்றும், இந்தச் சிவ சம்பந்தத்தை நிச்சயமாகக் கூட்டி வைக்கக்கூடிய சைவ சமயத்தின் முக்கிய பகுதியைச் '**சைவ மெய்ந்நெறி**' என்றும் பேசுகின்றோம்.

## சைவ அடையாளங்கள்

வெளியே வேலையாகச் சென்ற ஒருவர், அந்த வேலையிலிருந்து விடுதலைபெற்று வந்து ஓய்வெடுப்பதற்குத் தகுந்த இடமே வீடு. ஆனால், ஒரு குழந்தை தரையிலே கோடுகளைக் கீறி வீட்டைப் போலக் காட்டி, "இது என் வீடு" என்று சொல்லுகிறது. இன்னொரு குழந்தை கோட்டுக்குப் பதிலாக ஒரு கைப்பிடி உயரம் மண்வைத்து வீடு போலக் கட்டி, "இது என் வீடு" என்று கொண்டாடுகிறது. வயது வந்தவர்கள், தாங்கள் ஒரு வீடு கட்ட எண்ணி, அந்த வீட்டின் அமைப்பை எண்ணியபடியே ஏட்டில் எழுதி, அந்தப் படத்தை "இது என் வீடு" என்று காட்டுகிறார்கள், வீடுகட்ட அமைத்த அடி மட்டத்தையும் அதன் மேல் அறைகுறையாக எழுப்பியுள்ள சுவரையும் காட்டி, "இது என் வீடு" என்றும் சொல்லுவதுண்டு. ஒரு வீட்டின் புகைப்படத்தையும் வீடு என்று சொல்லுகிறோம். இன்னும், வீட்டைப் பார்க்கா விட்டாலும், வீட்டைச் சூழ்ந்தும் சார்ந்தும் இருக்கிற மரம் செடி கொடிகளைப் பார்த்ததும், "இதோ என் வீடு" என்று

சொல்லுவதும், அந்த வீட்டின் அடையாளங்களைப் பார்த்து, ''இதுதான் என் வீடு'' என்று சொல்லுவதும் உண்டு. இதுபோலவே, பிறவிப் பயனாகிய பேரின்பத்தைக் கைக்கு மெய்யாகத் தரும் சைவ மெய்ந்நெறியைக் கைவிட்டு, அதன் போர்வைகளாக உள்ள அடையாளங்களைச் சைவமென்று பற்றி நிற்கின்றார்கள் பலர்.

## சைவகுலம் சைவமா?

சைவகுலப் பெற்றோர்களுக்குப் பிறந்தவர்களைச் சைவர் என்கிறோம். தந்தை சைவரானால், மகன் சைவனாவது எப்படி? தந்தை ஒரு நீதி விசாரணை அதிகாரியானால் மகனும் அப்படி ஆகிறானா? இது செயலையல்லவா பொறுத்திருக்கிறது. பிறப்பு வேறு, செயல் வேறு. தெய்வப் புலவராகிய **திருவள்ளுவ தேவர்,**

> "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
> செய்தொழில் வேற்றுமை யான்."

என்று அருளிச் செய்துள்ளார். நீதி விசாரணைக்காரர் நீதிபதி தொழிலைச் செய்வதுபோலவே, சைவர் என்பவரும் சிவசம்பந்தம் பெற்றவர் ஆகவேண்டும். சைவ குலத்தில் பிறந்தவர் வழிபாட்டால் வைணவர் ஆவதும், வைணவ குலத்திற் பிறந்தவர் சைவர் ஆவதும் உண்டு. இந்து கிறிஸ்தவர் ஆகவில்லையா? இன்னும் கடவுள் உண்டென்பார் இல்லை யென்பவர் ஆகவும், இல்லை யென்பார் உண்டென்பவர் ஆகவும் மாறிக் கொள்வதில்லையா? இதனால், 'சைவப் பெற்றோர்க்குப் பிறந்

தினுலேயே ஒருவர் சைவராகார்' என்று சொல்ல லாம். இது பற்றிச் சிவஞானச் செல்வராகிய **சிவானந்த போத ஆசிரியர்,**

"நாலுவகை யோனியினும் எழுவகையின்
தோற்றத்தும் நளின மாக
மேலுகந்த மானிடந்தான்
எடுப்பதே அருமை"

என்றும்,

"மனிதரிலும் பறவையுண்டு விலங்குண்டு
கல்லுண்டு மரமும் உண்டு
மனிதரிலும் நீர்வாழும் சாதியுண்டு
அநேககுல மனிதர் உண்டு
மனிதரிலும் மனிதருண்டு வானவரும்
மனிதராய் வருவ துண்டு
மனிதரிலே பிறப்பறுக்க வந்ததே
அருமைஎன வகுத்தார் முன்னோர்."

என்றும், இதைச் சிறிதும் கவனியாமல் மயங்கித் தயங் கும் மக்களை நோக்கி,

"சாதி பேதம் தனைக்குறித்துத்
தயங்கி மயங்கித் தளராதே
சாதி யாவ தெவரறிவர்
சருவ உடலும் ஒன்றுச்சே
சாதி யாவர் எவரென்னில்
**தன்னை அறிந்து சிவமான**
**சாதி பெரிய சாதி**யென்று
சாற்றும் மறைகள் சத்தியமே."

என்றும்,

"ஞானம் பதியா இழிகுலத்தோர்
நாட்டிற் பிரித்தே சாதிதன்னை
ஈனச் சாதி யாரென்றே
இகழ்ந்தார் முத்தர் பத்தரையும்
ஆன பெரியோர் தங்களையும்
அவரில் ஒன்ருய்க் குறித்துக்கொண்டு
ஈனம் உரைத்தே அருநரகில்
இழிந்து போனர் இகத்தோரே."

என்றும் அறைந்தருளினர். திருவாசகம் அருளிய **மணிவாசகப் பிரான்** அவர்கள்,

"சாதிகுலம் பிறப்பறுத்துச் சகமறிய எனையாண்ட
ஆதியெனக் கருளியவா ருர்பெறுவா ரச்சோவே."

என்றும், அப்பர் என்ற **திருநாவுக்கரசு சுவாமிகள்,**

"கோத்தி ரமுங்கு லமும்கொண்
டென்செய்வீர்"

என்றும் அருளிச்செய் துள்ளார்.

"சாதி தயவை விருத்தி செய்வதற்குத் தடையா யிருப்பது"

என்ருர் **வடலூர் வள்ளல்** அவர்களும். இவ்வாறு கடவுள் நெறிக்குச் சாதியை அடிப்படையாக வைத்துக் கொள்வது, கடவுளின் நீதி நெறிக்கே மாற்றம் கூறுவதாகும். சைவ மெய்ந் நெறியாவது குரு நெறியே. ஆகவின், "**மெய்க் குருபிரான்கள்**" எந்தச் சாதியிற்

பிறந்தவராயினும் அவர்களை அணுகும் பொருட்டாய், இந்தச் சாதி பேதத் தடையை மீறுகின்றவர்களே வீரர்களாவார்கள்.

## சிவவேடம் சைவ மெய்ந்நெறியா ?

திருநீறு தரித்து உருத்திராக்கமணி கட்டிக் கொள்ளும் செயற் பழக்கம் உடையவர்களைச் சைவ ரென்று சொல்லுகிறார்கள். இச் செயல் குலப்பழக்கத் தால் வருவது. கடவுள் இல்லை யென்று சொல்லிக் கொண்டும், வாழ்நாளெல்லாம் திருநீறு பூசிக் கொள் ளாமலும் இருந்த ஒருவன் இறந்து போனாலும், அவ னுடைய உடலுக்கும் திருநீறு பூசியே எடுத்துக் கொண்டு போகிறார்கள். இது குலப் பழக்கம். இந்த வெறு வேடமாகிய வெளி வேடத்தால் இம்மையிலேயே கைக்கு மெய்யாகப் பலன் பெற்றவர் எவரும் இல்லை. இப் பழக்கம் தவறு என்றும், வேண்டாமென்றும் யாம் கூற வரவில்லை. மெய்ப்பயன் பெற்ற சமயத் தலைவர்கள் எடுத்து வைத்த புற வொழுக்கம் இது. அகவிளைவின் அடையாளமாகவும் உள்ளது. இது மட்டுமே சிவ சம்பந்தம் பெற்ற சைவனாக ஆக்கும் மெய்ப்பயனைத் தரக்கானே மாகையால், இந்த வெறு வேடம் மெய்ச்சைவநெறி அல்லவென்று மட்டுமே கூறுகின்றோம். தத்துவ சரிதை என்ற ஒரு புராதன நூலில்,

"செந்துகில் புனைவார் சீவரம் தரிப்பார்
திரிதண்டோ டொருதண்டு பிடிப்பார்

தந்தம்முத் திரைகள் பலபல தரிப்பார்
தவமெனத் தம்முடம் பொறுப்பார்
முந்துகாய் கிழங்கோ டிலையயின் றிடுவார்
மோனமென் பார்கத றிடுவார்
**இந்தவா குலத்தால் ஈசன்மே விடுமோ**
**இவர்துயர் உறுவதேன் அந்தோ.''**

*என்று காணக் கிடக்கின்றது.*

## சாத்திர ஞானம் மெய்ந்நெறியா ?

*வேத ஆகம புராண சாத்திரங்களைக் கற்பதும் கேட்பதுமே பெரும்பயனைத் தருமென்று இருக்கின்றார்கள் பலர். சைவ சமயாச்சாரியராகிய* **திருநாவுக்கரசு சுவாமிகள்,**

"**வேதம் ஓதிலென்** வேள்விகள் செய்கிலென்
நீதி நூல்பல நித்தல்ப யிற்றிலென்
ஓதி யங்கமோ ராறுமு ணரிலென்
**ஈச னையுள்கு வார்க்கன்றி யில்லையே.''**

*என்று அருளிச் செய்து, சாத்திர ஞானம் மெய்ப்பயனைத் தாராதென்று உணர்த்தி யிருக்கின்றார். மதுரைத் திரு விளையாடல் புராணம் இயற்றிய* **பரஞ்சோதி முனிவர்,**

''பண்ணால் மறைமுடியும் அறியாப் பரசிவனை
எண்ணால் அளவிறந்த எக்கலையால் கண்டும் உளக்
**கண்ணால் அறியாதார் வீட்டின்பம் காண்பரோ**
மண்ணாதி ஆறாறும் நீத்ததனி மாதவரே.''

என்று கேட்கின்றார். மக்கள் படித்துப் படித்துப் பக்தியை விளைவித்துக்கொள்ள வேண்டுமென்ற திரு நோக்கத்துடன் தெய்வத் திருவிளையாடல்களைப் பாடி யருளிய இப் பெரியார், அதே புராணத்தில், சிவ பெருமானை உளக்கண்ணால் நேரே காணாமல், கலையறிவினால் யூகித்தறிவதால் மெய்ப்பயனாகிய வீட்டின்பத் தைப் பெறமுடியா தென்னும் இந்தத் தீர்ப்பினைக் கூறி யுள்ளார். தவராஜராகிய **தாயுமானப் பெருமானும்,**

"கற்றதுங் கேட்டதுந்தானே ஏதுக்காகக்
கடபடமென் றுருட்டுதற்கோ கல்லா
லெம்மான்
குற்றமறக் கைகாட்டுங் கருத்தைக்கண்டு
குணங்குறியற் றின்பநிட்டை கூடவன்றோ?"

என்றருளியதில், கற்பதும் கேட்பதும் வீண் வாதம் பேசுவதற்கோ? பரம குருபிரானுடைய திருவுளப்பாங்கின்படி நடந்து, நிஷ்டைகூடி, இன்பமடைய வல்லவோ? என்றார். இன்னும், **தாயுமானவர்** அவர்களே,

"என்னறிவை உள்ளடக்கி
என்போல் வரும்மவுனி
தன்னறிவுக் குள்ளேநான்
சாருநாள் எந்நாளோ"

என்றும் அருளிச் செய்துள்ளார். **திருக்களிற்றுப்படி** யார் என்னும் சாத்திரமும்,

"சாத்திரத்தை ஓதினர்க்குச் சற்குருவின் தன்வசன
மாத்திரத்தே வாய்க்குநலம் வந்துறுமோ—
ஆர்த்தகடல்

தண்ணீர் குடித்தவர்க்குத் தாகம் தணிந்திடுமோ
தெண்ணீர்மையாய் இதனைச் செப்பு.''

என்று கூறுகின்றது. இன்னும்,

''கல்வி என்னும் பல்கடல் பிழைத்தும்''

என்று திருவாசகமும்,

'' சாத்திரக் கூட்டங்களை விட்டு எது சத்தியமோ
அது உபாசிக்கத் தக்கது.''

என்ற வடமொழிப் பைங்களோபநிடத வாக்கியமும், கல்வியறிவு மெய்ப்பயனைப் பெற்றதாகா தென்பதையே வலியுறுத்துகின்றன.

தியானத்தைப்பற்றி எழுதியுள்ள நூல்களைப் படித்து யோகியாவதைக் காட்டிலும், படமெழுதுவதைப்பற்றி எழுதியுள்ள புத்தகங்களைப் படித்துப் படம் எழுதுகிறவனாக ஆவது எளிது என்றும் சொல்லுவார்கள். எவ்வளவோபேர் இப்போதுள்ள வேதங்களை எழுத்தெண்ணிப் படிக்கின்றார்கள், பாராயணமும் பண்ணுகின்றார்கள், மற்றவர்களுக்கும் எடுத்துச் சொல்லுகின்றார்கள். இவர்கள், அந்நூல்களின் உட்பொருள்களுக்கு அதாவது அனுபவச் செயற்பொருள்களுக்குப் பக்கத்திலும் செல்லக் கூடுவதில்லை. இவர்களுடைய விளக்கம் குருடனுக்குக் குருடன் வழி காட்டுவது போன்றதல்லாமல் வேறென்ன? குங்குமம் சுமந்த ஒரு பிராணியைப் பார்த்து, அக் குங்குமத்தின் குணத்தைப்பற்றி விசாரித்தால் அதற்கு என்ன தெரியும்?

"கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன்
நற்ருள் தொழாஅர் எனின்"

என்று கூறிய **தெய்வப் புலவரும்**, கற்பதன்பயன் வாலறிவராகிய சற்குருபிரானுடைய நல்ல திருவடிகளை வணங்குவதேயென்றும், அதன்மேல், மனிதப் பிறவியின் பயனை அடைவிப்பதும் கல்லாமல் கற்பதுமாகிய எல்லையில்லாத அழியாத தெய்வ மெய்க் கல்வியை, அந்தச் சிவகுருபிரானிடமே பெறவேண்டுமென்றும் உய்த்துணர வைத்தருளினுர்.

## புறக்கோயில் வழிபாடு மெய்ந்நெறியா?

ஊர்களில் தெய்வத் திருக்கோவில்கள் எங்கெங்கும் இருக்கின்றன. கோவிலுக்கு நாடோறும் செல்வோரும், வாரம் ஒரு முறை செல்வோரும், மாதம் ஒரு முறை ஆண்டுக் கொரு முறை செல்வோரும், பல ஆண்டுகளுக் கொரு முறை செல்வோரும் உண்டு. கோவிலில் உள்ள தெய்வம், மக்கள் கேட்டதைக் கேட்டபடியே தருவ தாயிருந்தால் இவ் வழிபாடு இப்படிக் குறைந்து போகாமல் பெருகியிருக்கும். கோவில்களை அமைத்தவர்கள் யார்? அவர்கள் எவ்வாறு அமைத்தார்கள்? எதற்காக அமைத்தார்கள்? என்ற உண்மைகளை மெய்ந்நெறி முறையில் தலையிட்டுள்ள உத்தம உத்தமர்களே அறிகின்ருர்கள். இறைவன், தான் வெளியாக வேண்டு மென்னும் காருண்ய நாட்டத்தினுலே மனித உடலுக் குள்ளாகவே கோயில் கொண்டிருக்கின்ருன். இறைவனை மனிதனுடைய உள்ளப் பெருங்கோவிலில் அல்லாமல் வேறெங்கும் காணமுடியாதென்று, கடவுளை

நேருக்கு நேராக மெய்யாகவே கண்டு அனுபவித்த பெரியோர்களுடைய மறைமொழிகளும் கூறுகின்றன. அப் பெரியோர்களே அசல் ஆலயத்தின் அடையாளமாக, வெளியே ஆலயங்களையும், ஆலயங்களில் இருக்கும் தெய்வ உருவங்களையும் அமைத்து வைத்தார்கள். **நெஞ்சறி விளக்கம்,**

" ஐவகைப் பூதந் தொண்ணூற் ருறுதத்
துவங்க ளாட்டும்
தெய்வமுன் னிடத்தி ருக்கத் தேசத்தி
லலைந்தாய் நீதான் "

என்று கூறுகின்றது.

இதனுல் மனித உடலுக்குள் கோயில்கொண்டிருந்து இவ்வுடலினை நடத்துகின்ற **நடராஜப் பெருமான்** அசலான மெய்த்தெய்வம் என்றும், வெளிக் கோயிலிலுள்ள நடராஜப் பெருமானுடைய திருவுருவம் நகல் என்றும் தெரிய வருகிறது. இதுபோலவே தெய்வ உருவங்களின் திருக்கரங்களிலுள்ள சங்கு, சக்கரம், அங்குசம், வில், வாள், வேல், உடுக்கை, சூலம் முதலானவைகளும் நகலேயாகும். இனி, இந்த நகலுக்கு அசலாக உள்ளவை யாவையென்று, அறிந்த பெரியோர்களிடத்திலே கேட்டு உண்மை உணர்ந்துகொள்ளவே, அவைகள் நகலாக எடுத்து வைக்கப்பெற்றிருக்கின்றனவே யல்லாது, அவைகள் தாமாகவே பலன்தர இருப்பன அல்ல. மெய்யான வாழைப்பழம் பலன் தருவதுபோல் மரத்தால் செய்து சாயம் தீட்டிய நகல் வாழைப்பழம் பசியாற்றும் பயனைத் தருவது எங்கேனும்

உண்டா? மெய்ப்பழம் காலணாவாக, நகல் பழம் கால் ரூபாயாவதே கண்ட பலன். மனிதனுடைய உள் உடம்பிலுள்ள உள்ளப் பெருங்கோயிலில் செய்யும் அக வழிபாட்டினை அப்படியே புறக்கோயிலிலும் எடுத்து வைத்தார்கள். அகக் கோயிலை வலம்வரப் பலன் கையில் வருவதையும், புறக்கோயிலை வலம்வர அப்பலன் கிட்டாமற் போவதையும் மெய்ப்பாட்டையில் தலையிட்டுள்ள சாதகர்களாகிய தொண்டர்கள் ஒவ்வொருவரும் அறிவார்கள். **தெய்வத் திருமூலர்,**

" சத்தியார் கோயில் இடம்வலம் சாதித்தால்
மத்தியா னத்திலே வாத்தியம் கேட்கலாம் "

என்று அருளிச் செய்தது அசல் ஆலயத்தைப் பற்றியேயாம்.

இவ்வாறே, ஒரு மதத்தின் சிகரம் அதன் மூல மந்திரம். மூல மந்திரம் மதம் என்ற உடலுக்கு உயிர் என்றும் சொல்லலாம். தெய்வத்தின் திருநாமமே இம் மந்திரமாக அமைந்துள்ளது. ஆகவே, மந்திரம் குறிப்பது பொருளையேயாம். இத்தெய்வப் பொருளை நேரில் அறியா விடில் பயன் என்ன? இதனை நேரில் கண்டறிவதே சிவகுரு பிரானிடம் பெறும் தெய்வ **மேய்க்கல்வி.**

இந்த உடலிலுள்ள தத்துவங்களைப் பற்றி எல்லோரும் பேசுவார்கள். ஆனால், அவற்றை ஒவ்வொன்றாகக் காட்டச் சொன்னால் அவர்களுக்குக் காட்டத் தெரியாது. சைவர்கள் தூல உடம்பிலுள்ள தத்துவங்கள், சூக்கும உடம்பிலுள்ள தத்துவங்கள், காரண உடம்பி

லுள்ள தத்துவங்கள் என்று தனித்தனிப் பகுதிகளாகக் குறிப்பிட்டு, இவற்றிற்கு முறையே ஆத்ம தத்துவம், வித்தியா தத்துவம், சிவ தத்துவம் என்று பெயர் கூறுவார்கள். ஆனால் இவற்றின் சொரூபமே அறிதற்குரியது. சாமான்கள் இன்னின்னவென்று தெரியாமல் அவற்றில் புழங்குவோர் புழங்குவது எப்படி? இத் தத்துவங்களை நேரில் கண்டறிவதே, நாம் சிவகுரு பிரானிடம் பெறும் தெய்வ மெய்க்கல்வி.

பதி பசு பாசம் என்னும் முப்பொருள்களின் சம்பந்தத்தை அத்வைதம், சுத்தாத்வைதம் என்று பேசுகின்றார்கள். ஆனால், இவற்றின் உண்மைச் சொரூப நிலையைத் தம்மிடத்திலேயே நேரில் கண்டறிந்து அனுபவிக்க வேண்டும். இது குறித்து,

"வானத்தில் அமுதுளது மதுரிக்கும் அதுபருகின்
மரணமணு காதென்று பூ
மண்டலத் தவரறியு மாறுபோல் ஓலையில்
வரைந்துபதி பசுபாசமென்
றூனத்தில் அறிவதல தனுபவித் தறிதலுக்
கொருமைப்படாம லவமே
உலகெலாம் குருவெனத் திரிவரவர்
போதனைக் குனையொத்த குருவாவரோ."

என்று தருமபுர ஆதீன முதற் கர்த்தராகிய குருஞான சம்பந்தரவர்கள், தங்கள் குருபெருமானைத் துதித்திருக்கின்றார். இம் முப்பொருள்களையும் நேரில் கண்டறிவதே சிவகுரு பிரானிடம் நாம் பெறுகின்ற தெய்வ மெய்க்கல்வி.

இப்படியே தூலதேகத்திற் பேசப்பெறும் ஆருதாரங்கள் முதலான பலவும், சூக்கும தேகத்தில் காட்டக்

கண்டறிவதே தெய்வ **மெய்க்கல்வியாம்.** இம் மெய்க் கல்வியையே,

" காட்டாதன வெல்லாங் காட்டிப் பின்னுங்
கேளாதன வெல்லாங் கேட்பித்து "

என்று மணிவாசகருடைய **திருவாசகம்** கூறியது.

இன்னும், சிதம்பரம் என்னும் சிதாகாசம் மனித உடலில் இருக்க, அது வெளி ஆகாசத்தில் உள்ள சிதம் பரம் என்னும் தலமாகுமா? பொன்னம்பலம், பொன்னரங்கம் என்பவை பொன் ஓடு போட்ட சபைகளா? இவையாவும் நகல் என்பது சிறிது சிந்தனை உடையவர்க்கும் தெரியவரும். சிவ சின்னங்களாகிய திருநீறு உருத்திராக்கம் முதலியவும் அடையாளங்களே. இவற்றின் உண்மைகளையும் மெய்கண்ட சிவகுரு பிரா னிடமே கேட்டுத் தெளிதல் வேண்டும்.

மக்களை, அவர்தம் அறிவு ஆற்றலுக்குத் தக்க படியாக மெய்ந் நெறியில் மெல்ல மெல்ல கடத்திச் செல்ல வேண்டு மென்பதே மெய்கண்ட பெருஞ் செல்வர் களுடைய திரு நோக்கம். பிறவிப் பெரும் பயனைப் புறக்கோயில் வழிபாட்டில் பெற முடியவில்லை என்று காண்போர், தங்களைத் தேடியடைந்து அகவழிபாட் டிற்குத் திரும்புவர் என்பதே அவர்களுடைய திருவுளக் குறிப்பு மாகும், ஆர்வத்தோடு முறையாகத் திருக் கோயில் வழிபாடு செய்து, அதில் பயன் காணாது அகவழி பாட்டிற்குத் திரும்பிய ஒருவர்,

" எத்தனை யோதலம் சுற்றிவந்
தேன்மனம் எட்டுணையும்

அத்தன் குமரன் முருகனே
நாட அடங்கவிலே"

என்று பாடி யிருக்கின்றார். சைவ சமயத்தில் இவ்வள வென்று அளவு சொல்லமுடியாத அழுத்தமான இலட்சி யம் வைத்திருந்த **வடலூர் வள்ளற் பிரான்** அவர்கள்,

"பேருற்ற வுலகிலுறு சமயமத நெறியெலாம்
பேய்பிடிப் புற்றபிச்சுப்
பிள்ளைவிளை யாட்டென வுணர்ந்திடா துயிர்கள்பல
பேதமுற் றங்குமிங்கும்
போருற் றிறந்துவீண் போயினர்"

என்று தமது குருபெருமான் அவர்கள் தமக்குக் கூறிய தாகச் சொல்லுவதும், **அவ் வள்ளலார்** அவர்களே,

"கடவுள் மனித தேகத்தில் காரியப்படுவது உத்தமமாக இருக்க, சிலர் விக்கிரக பூத தாரு முதலியவைகளில் கடவுள் தோன்றி அனுக்கிர கிப்பதாகச் சொல்லுவது ஜாலம்."

என்று கூறியதும் இங்கே சிந்திக்கத் தக்கவை. **தாயு மானவர்** அவர்களும்,

"மூர்த்திதலம் தீர்த்தம் முறையாய்த்
தொடங்கினர்க்கோர்
வார்த்தைசொல சற்குருவும்
வாய்க்கும் பராபரமே."

என்று அருளிச் செய்துள்ளார். இதனால், மூர்த்தி தலம் தீர்த்தம் முதலில் வேண்டியன வென்பதும், இவற்றால் திருந்தியவர்க்கே மெய்ப் பாதையில் மேல

மைத்துச் செல்லச் சற்குரு பெருமானவர்கள் வாய்ப் பார்களென்பதும் தெளிவாக அறியப் பெறுகிறது. இன்னும், ஆலய வழிபாட்டினை, மெய்ந் நெறிக் கோட்டைக்குள் புகுவதற்கு முன்பாக உள்ள படிகளில் ஒன்றாகக் கொள்ளலாமே யல்லாமல், பிறவிப் பயனைப் பெறுவதற்கு வேண்டிய குறிக்கோளான நிலை அது வல்ல வென்பதையும் மேலே எடுத்துக் காட்டிய **தாயுமானவர்** அவர்களின் திருவாக்கே விளக்கி யுள்ளது.

> இன்னும், "விக்கிரகங்களை வணங்குவோர் கடவுள் மீது தங்களுக்கு உண்டாகின்ற பக்தியை வீணாக்குகிறார்கள். உருவங்களை மாத்திரமே பார்க்கிறார்கள். உருவ மில்லாத கடவுளின் சோதி சொரூபத்தைக் காண்பதில்லை. இந்தச் சொரூப மில்லாமல் அந்த உருவங்களுக்கு என்ன உண்டு? இன்னும் உருவங்களை வழிபடுகிற மனிதன், வெளியே யுள்ள அவ் வுருவங்களில் பாய்ந்து அவைகளோடேயே மரிக்கிறான்."

என்றும் சொல்லப் பெறுகிறது. மேலே கூறி வந்துள்ளவைகளை நிறுத்துப் பார்க்க, மெய்ச் சமய வாழ்க்கை யென்பது சாதியிலும், வெளி வேடத்திலும், ஆலய வழிபாட்டிலும், வேதம் ஓதுவதிலும் இல்லை என்பது திண்ணம். இந் நாளில் மலிந்து கிடக்கும் இவற்றால் பெறும் பயனோ, மணல் வீடு கட்டி, மணல் சோறு சமைத்து, மனம் மிக மகிழும் இளம் பிள்ளைகள் பெறும் பயனைத் தவிர வேறில்லை என்றே, மெய்க் கோயிலில் மெய் வழிபாடு செய்து மெய்ப் பயன் பெற்ற பெரியோர்களுடைய அருளிச் செயல்கள் விளக்குகின்றன.

சமய வாழ்வு, நகலை அசலாக அதாவது பொய்யை மெய்யாக எண்ணும் இந்த நிலைக்கு வந்து நிற்பதன் காரணம் என்ன வென்றால், மக்கள் அழியாத நித்திய மான மெய்ப் பிரயோசனத்தை அடைவதற்காகவே இறைவன் இந்த உடலைத் தந்தருளி யிருக்கிறா ரென்று உணராமல் இருப்பதே யாகும். வந்த வேலையை விட்டு எந்த வேலையோ செய்கின்றான் என்பது போலவும், காசிக்குப் போகப் புறப்பட்ட ஒருவன் வடக்கு நோக்கிப் போகாமல் தெற்கு நோக்கிப் போகின்றான் என்பது போலவும், மக்கள் அழியாத வீட்டினைப் பெறும் வேலையில் ஈடுபடாமல் அழிந்து போவதைத் தேடும் வேலையைச் செய்துகொண்டு, அதிலேயே ஆழ்ந்து மயங்கிக் கிடக்கின்றார்கள். இதனினும் பெரியதொரு காரணம் வீட்டைப் பெறுவதற்காகவே இவ்வுடல் தரப் பெற்றதென்று அறியப் பெற்றாலும், வீட்டை அடை விக்கும் பெரியோர்கள் முற்காலத்தே யிருந்தார்கள், அவர்கள் இப்போது இல்லை யென்று தேடி அலுத்த வரைப் போல் பேசுவார்கள். இதோ இங்கே ஒரு மெய்க் குருபிரான் எழுந்தருளி யிருக்கின்றா ரென்று சொல்லக் கேட்டாலோ, அப்போதும் அந்தத் தேவ பிரானைச் சந்திக்க மாட்டாமல் பல சாக்குப் போக்கு களைச் சொல்வார்கள். இதன் காரணம், அவர்களுடைய 'அற்ப மதிப்பும் சோம்பேறி அசட்டுத் தனமும் கறை படிந்து தடிப்பேறி' யிருப்பதோடு, அவர்களுடைய மெய்ஞ்ஞான இச்சைக்கு இவ்வுலக அழிவு இச்சை மிகுந் திருப்பது மாகும்.

இனி, மெய்க் கோயில் எது? மெய் வழிபாடு எது? மெய்ப் பயன் என்ன? என்று காண்போம்.

## காயமே மெய்க் கோயில்

மெய்க்கோயில் மனிதனுடைய உடலுக்குள்ளே தான் இருக்கிறது என்று எல்லா வேதங்களும் கூறு கின்றன. தெய்வத் திருநாவுக்கரசு நாயனர்,

"காயமே கோயிலாக"

என்றருளிச் செய்தார்.

"உடம்பினைப் பெற்ற பயனுவ தெல்லாம்
உடம்பினுள் உத்தமனைக் காண்.'

என்ற மெய்த்திருவாக்கும் மேலே காட்டப்பெற்றது. சைவத்திற்கு வேருன சமயங்களும், இதனையே வலி யுறுத்துகின்றன. தெய்வத் தமிழ் மொழியும் உடம்புக் குள் இறைவன் இருப்பதைக் குறிப்பிடுகின்ற "கடவுள்" என்ற திருப்பெயரையே இறைவனுக்கு இட்டுத் தனக்கு அழகு செய்து கொண்டது. இந்த மெய்க் கோவிலுக்குச் சொந்தமான திருப்பெயர்களையே தமிழர்கள், தமிழ் நாட்டிலுள்ள தெய்வத் தலங்கள் எல்லாவற்றிற்கும் இட்டு வழங்கி வருவது, இவர்கள் அடைந்திருந்த தெய்விக மேம்பாட்டினையே குறிக்கின்றது.

## அசல் தெய்வ வழிபாடே மெய்வழிபாடு

மெய் வழிபாடு என்பது மெய்க்கோயிலிலுள்ள மெய்த் தெய்வத்தை வணங்குவது. **மைத்ரேயோப நிடதம்.**

"மறு பிறப்பெய்தா திருக்குமாறு தனது இருதயார்ச் சனத்தையே செய்தல் வேண்டும். வெளிமுக அர்ச்சனத்தை ஒழித்தல் வேண்டும்"

என்று கூறுகின்றது, தேவத் தீர்மானப்படி பூட்டி வைக்கப்பெற்றுள்ள இந்த இருதயக் கோவிலின் திறவு கோல், மெய்க் குருபிரான்களின் கைவசம் இருப்பதால், அவர்களுடைய உத்திரவு இல்லாமல் எப்பெரிய வல்லாளர்களும் இதன் உள்ளே புக முடியாது. இக்கோயிலிலுள்ள அசல் தெய்வத்தின் வணக்கமானது, வேதாகம சாத்திரங்களிலும் விளக்கமாகச் சொல்லப் பெறவில்லை. இவ் வணக்கம் தலைமுறை தலைமுறையாக இதற்கென்றே இறைவனால் நியமிக்கப்பெற்றுவரும் சற்குரு பெருமான்களின் திருவுளப்பாங்கின்படி நடைபெற்று வருகிறது. **குரு கீதையும்,**

> "சிவனுடைய சொரூபத்தை அறியாமல் சிவபூசை செய்வது, சித்திரத்திலுள்ள விளக்கைப் போல் பேருக்கு மாத்திரம் செய்யும் பூசையாகும்."

என்பதால், இச் சிவசொரூபத்தைக் குருபெருமானவர்கள் காட்டக் காணவேண்டி யிருக்கிறது. ஆகையால், அத்தகைய சற்குரு பெருமான்களைப் பற்றியே நாம் முதலில் அறிய வேண்டும்.

## ஞானிகளின் மகிமை

கடவுளை அறிந்து அனுபவிப்பவர்கள் இவ்வுலக அறிவுக்கும் தேவ உலகுக்கும் அரசர்கள். அவர்களுடைய பெருமைக்கு எல்லையளவு இல்லை. மெய்த் தவ மேராகிய **தத்துவராய சுவாமிகள்,**

> "அறிந்தவர்களுடைய பெருமையை எடுத்துக் கூற மனிதராலும் தேவராலும் முடியாது. மும்

மூர்த்திகளும் அவர்களை வணங்கி, அவர்கள் இட்ட வேலையைத் தலையால் செய்ய முந்துவார்கள். இந்த உலகம் உய்யும் பொருட்டாகக் கடவுள் அவர்களிடமாக நின்று அருள் புரிவதால், அவர்களை நரர் என்றும், சுரர் என்றும் சொல்லாதே.''

என்று சசிவர்ண போதத்தில் அருளிச் செய்துள்ளார். இன்னொரு பெரியார்,

''கடவுளின் அன்பர் ஒரு தூர தேசத்தில் இருக்கிறாரென்று கேள்விப்பட்டால், அவரைத் தரிசித்து வணங்க உனக்குக் கால் இருந்தால் அங்கே போ. அவருடைய ஆசிர்வாதத்தால் துயரம் விலகும். அவருடைய பிரசாதத்தால் ஆயுள் வளரும்.''

என்று கூறியுள்ளார். **பிரம கீதை,**

**''ஈசனும் ஞானி இருந்துள இடத்தே இருப்பதே**
**முத்திதான் அந்தத்**
**தேசிகன் ஏவல் செய்பவன் கால்என்**
**சென்னியில் இருப்பது மன்னி**
மாசிலாப் பரம ஞானியாம் முனிக்கு
மகேசனும் ஒப்பலன் மதிக்கில்
ஆசிலா அரியும் ஒப்பலன் யானும் ஒப்பலன்
ஏவர்ஒப் பாரே.''

என்று பேசுகின்றது.

## சற்குருராஜர் மனித கோலத்தில் வருவது

கடவுள் சம்பந்தத்தைப் பெற்ற மெய்ஞ்ஞானியர் பலர் இருக்க, அவர்களுள் ஒரு **சிலர், மக்களைக் கடவுளிடம்**

சேர்ப்பிக்கும் அதிகார முத்திரைகளாகிய தேவசன்னதங்களைத் தங்கள் திரு மேனியிலேயே தாங்கி வருகிறார்கள். அவர்களே சற்குரு பெருமான்கள். "வானவரும் மனிதராய் வருவதுண்டு" என்று மேலே எடுத்துக்காட்டியுள்ளபடி, அவர்களும் மனித கோலத்தில்தான் மற்றவர்களைப் போலவே வருகின்றார்கள். சற்குரு பெருமான் மனித உருவில் வருவதால், அவருடைய அகமுகமான தெய்வப் பொறுப்பையும் தெய்வ வலிமையையும் மக்கள் அறிவதில்லை; அவருடைய திருமேனியின் பரிசுத்தத்தையும் உணருவதில்லை.

சமீப காலத்தில் கடவுளைக் காணும் முயற்சியில் ஈடுபட்டிருந்த ஒருவர், மெய்ஞ்ஞானச்செயல் கைவரப் பெறுவதற்குத் தமக்கு ஒரு குருபெருமான் வேண்டுமென்று உணர்ந்திருந்தும், ஞான விருப்பினர்க்கு ஆசை காட்டி அவரை வஞ்சித்து ஏய்க்கும் நஞ்சரும்; மெய்க் குருமார்களுக்குப் பின், அவர்கள் விட்டுப் போகின்ற அழிசம்பத்தான பொய்ப்பொருள்களை மட்டுமே பேணிக் கையில் மெய்யொன்றுமின்றி அவர் பீடத்திலிருந்து காலங்கழிக்கும் வறிஞரும்; மெய்க்குரு கோமான்கள் பாற் சின்னாளிருந்து விலகி, அந்நாட்களில் அவர்களிடத்தே தாம் பெற்றதை விற்று வயிறு வளர்த்துத் திரியும் வஞ்சரும் மலிந்திருக்குங் காரணத்தினாலோ, மற்றெதனாலோ, " தற்காலத்தில் குருமார்களென்று பலர் வேடம்போட் டிருப்பதால், அவர்களுள் மெய்க் குருபிரானைத் தேர்ந்தறிவதற்கில்லை; தேவரீரே வந்தருள வேண்டும்." என்று தான் வழிபடு தெய்வமாகிய சிவசுப்பிரமணிய மூர்த்தியை வேண்டி நின்றார்; இவ் வேண்டுதலால் அவர், "தெய்வம் திடீரெனத் தோன்றி மறையும்" என்று எண்ணியிருந்தார்.

அவர், தமது தன்னறிவு முயற்சியால் தாம் விரும்பிய மெய்ப்பயனையும் இவ் வுடலுள்ளபோதே பெறவில்லை யென்று அவர் தம் எழுத்தே அறிவிக்கின்றது. இப் படியே பெரும்பாலோர், உண்மை உணராமலும் தெளிவு பெருமலும்தன்னறிவையே நம்பி மோசம்போய், இறுதியில் இருளில் நுழைகின்றுர்கள். மேலே 32--ஆம் பக்கத்தில் எடுத்துக் காட்டியுள்ள **தாயுமானச் செல் வரின்** முன்னெச்சரிக்கையை மீண்டும் இங்கே சிந்திக்க வேண்டும்.

சீடனுக்கு மறு பிறப்பாகிய தேவப் பிறப்பைத் தந்து, நித்தியமான சூட்சும சிவ உடலிற் குடியேற்றி, பசுகரணங்களைச் சிவகரணங்களாக மாற்றி, நாளுக்கு நாள் கிருபா நோக்கம் செய்து பாதுகாத்து, பிரமக் கடலில் அந்தச் சீடனைத் தங்கவைத்து ஆள்வதற்கான செயல், ஒரு சிறுபோது தோன்றி மறையும் ஆவியால் செய்யக் கூடியதாகுமா? 'திடீரென்று ஒருவர் தோன்று வார்' என்று நம்புவது, தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்வதும், வாணுளை வீணுளாக்கிப் பிணிபட்டு உழன்று மாய்வது மாகும். **சிவஞான சித்தியாரில்,** "ஆரியனும் ஆசான்வந் தருளால் தோன்ற" என்பதற்குத் திருவாவடுதுறை ஆதீனத்துச் **சிவஞான சுவாமிகள்,** "கேட்பித்தலோடும் தோன்றும் ஆசிரியன் சன்னிதி மாத்திரையானே" என்று கூறியிருப்பது சிந்திக்கத் தக்கது. 'தோன்ற' என்பது சீடன் ஆவலோடு அவரைச் சந்திப்பதையே குறிக்கின்றது. **திருமந்திரத் திருமுறை,**

" சூரியன் சந்நிதி யிற்சுடு மாறுபோல்
ஆரியன் தோற்றமுன் அற்ற மலங்களே "

என்றதும் இதுவே. வான நாட்டுத் தேவபிரான், நரரை மக்களாக்கி மக்களைத் தேவர்களாக ஆக்க, மனித கோலத்திலேயே வந்தருளுகின்றாரென்னும் உண்மையைச் சந்தான குரவராகிய **அருணந்தி சிவாச்சாரியார்,**

> "**ஊரும் பேரும் உருவுங் கொண்டென்**
> ஊரும் பேரும் உருவும் கெடுத்த
> பெண்ணை சூழ்ந்த வெண்ணெயம் பதியிற்
> சைவ சிகாமணி மெய்யர் மெய்ய"

என்றும்,

> "பெண்ணைப் புனல்வயல் வெண்ணெய்க் கதிபதி
> கைகண் தலைவாய் கால்செவி மூக்குயர்
> **மெய்கொண்** டென்வினை வேரறப் பறித்த
> மெய்கண்ட தேவ வினையிலி
> மைகொண்ட கண்ட வழுவிலென் மதியே"

என்றும், சிவானுபூதிச் செல்வராகிய **உமாபதி சிவாச்சாரியார்,**

> "இறவாத இன்பத் தெமையிருத்த வேண்டிப்
> பிறவா முதல்வன் பிறந்து—நறவாருந்
> தாருலா வும்புயத்துச் **சம்பந்த நாதனென்று**
> **பேரிலா நாதன்ஒரு பேர்பு**னைந்து—பாரோர்தம்
> உண்டி உறக்கம் **பயம்இன்பம்** ஒத்தொழுகிக்
> கொண்டு மகிழ்ந்த குணம் போற்றி"

என்றும், சைவ சமயத்தைப் பாரத நாட்டின் வடகோடி வரை பரவச்செய்த **குமரகுருபர சுவாமிகள்,**

" சாயா மும்மலச் சகலரே முய்ய
எம்முருக் கொண்டும் எம்மொடு பயின்றும்
மும்மலக் கிழங்கை முதலொடும் அகழ்ந்து
சிற்பரம் உணர்த்தும் சற்குரு ராய "

என்றும்,

" மஞ்சிறைச் சுதைநிறச் செஞ்சூட் டன்னமும்
செம்மயிர்க் கருங்கண் வெள்ளெயிற் றேனமும்
ஆகுபு தனித்தனி அலமர நிவந்த
மீகெழு பரஞ்சுடர் வெளிப்பட் டம்ம
எம்மனோர் போல இனிதெழுந் தருளிக்
கைம்மா றற்ற கணக்கில்பே ரின்ப
மோனவாழ் வளிக்கும் ஞான தேசிகன் "

என்றும், தருமபுரத்துக் குருஞான சம்பந்த தேசிகர்,

" உள்ளிருந்தே யென்றும் உணர்த்துகினும் கண்டிலரென்
றுள்ளும் புறம்புமா வோமென்று—மெள்ள
நரருருவாய் ஆரூரில் வந்தான் நமையாண்
டருள்புரிஞா னப்பிரகா சன்."

என்றும் அருளிச்செய் திருக்கின்றார்கள். இதனால், மனித கோலத்தில் இங்கு எழுந்தருளி வந்து, இருந்து, தம்முடைய மாணக்கனை உருவாக்குகின்றவரே சற்குரு பெருமான் என்ற உண்மை அறியக் கிடக்கிறது.

யார் எங்கு இருந்தாலும், அவருடைய நிலைமை என்னவா யிருந்தாலும், அவர் இறைவனைத் தரிசிக்க வேண்டு மென்னும் ஒரே இச்சை யுடையவராக

மாத்திரம் இருந்தால், அவர் மனித கோலத்திலுள்ள ஒரு மெய்க் குருதேவரைச் சந்திக்க இறைவனால் ஏற்பாடு செய்யப்பெற் றிருக்கிறது. மனிதனுடைய உபயோகத்திற் கென்று சூரியர் சந்திரர் முதலிய எல்லாப் பொருட்களையும் அவன் பிறக்கும் முன்பே படைத்து வைத்திருக்கும் இறைவன், அம் மனிதன் தம்மைத் தரிசித்துப் பேரின்பத்தை அனுபவிக்க, அதற்கு வழி காட்டியராகிய சற்குரு பெருமானைப் படைத்து அனுப்பாமலா யிருப்பார்?

ஒரு சீவன் இன்னொரு சீவன் மூலமாகவே உண்டாவது போல், ஞான தீபமும், அது யாருடைய இதயத்தில் முன்பே பிரகாசித்துக்கொண்டு இருக்கின்றதோ அவர்களோடு சம்பந்தப் படுவதால்தான் ஏற்றப் பெறுகிறது. தான் என்பது இன்றி, தன்னுடைய இஷ்டத்தைக் குருவின் ஏவலுக்கு விட்டு, அவரோடு ஒட்டியிருந்தால், அந்தக் குரு தம்மிடம் பிரகாசிக்கும் ஞானத்தைச் சிஷ்யனிடமும் வந்து பிரகாசிக்கச் செய்வது சத்தியம்.

இன்னும், மின்சார சக்தியுள்ள பொருள்கள் தம்மோடு சம்பந்தப்பட்ட எல்லாப் பொருள்களுக்கும் மின்சாரத்தை ஊட்டுவது போல், தேவ ஆவியால் நிறப்பப் பெற்ற தூலத்திரு மேனியோடு கூடிய குருமார்கள், தங்களோடு சம்பந்தப்படும் சீவர்களுக்குத் தேவ ஆவியை ஊட்டுகின்றார்கள். இதனால் தான்,

" திரிகாலமும் உணரலாம். சூரியனை அஸ்தமிக்காமல் இருக்கச் செய்யலாம். கடலை எளிதாகக்

கடக்கலாம். ஆனால் சற்குருவைச் சந்திப்பதே கடினம்" என்றும்,

"சற்குரு பெருமான்களைச் சந்திப்பது மிக மிக அதிர்ஷ்டம்" என்றும்,

தேவ நாட்டு அரச ரொருவர் அருளி யுள்ளார்.

## குருவில்லையானால் சிவமும் இல்லை

மெய்ச் சைவத்தைப் பற்றிக் கேட்டவர் அவ வழியில் நடந்தவர் அன்று. அவருக்கு அவ் வழியே தெரியாது. சிவகுரு பிரானைச் சந்தித்தவரே பாதிவழி நடந்தவராகின்றார். குருவின் கருணை இல்லையானால், குருடன் வழி நடந்து குழியில் விழுவது போல விழ வேண்டியது தான். குருவின் பாதுகாப்பால்தான் கடவுள் வெளியாகிறார், குருவின் வல்லபத்தினாலேயே முன் வந்த பெரியோர்களும் ஞானிகளும் தம்மையும் தம் தலைவனாகிய சிவனையும் அறிந்து கொண்டார்கள். ஸ்ரீ இராமபிரானும், ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவும் தங்கள் குருவினிடமே முழுவதும் சரண் புகுந்தவர்கள். குருவின் தயவைப் பெறாதவர்களுக்குச் சிவம் வெளியாகிற தில்லை என்னும் தம்முடைய அனுபவத்தைப் புலப் படுத்தவே,

"குருவி னடிபணிந்து கூடுவ தல்லார்க்
கருவமாய் நிற்கும் சிவம்."

என்றருளிச் செய்துள்ளார் ஔவைப் பிராட்டியாரும்.

வேத வேதாந்தங்களெல்லாம்,

"வீடுபெற விரும்புகிறவர்கள் குருவின் உதவியாலன்றி வேறு எதனாலும் அதை அடைய முடியாது.

இன்னும்,மக்களுக்கு முடிவில்லாத தேவ வாழ்க்கையை வளிப்பது குரு பிரானுடைய இஷ்டத்திலேயே இருக்கிறது. இதற்காக அவர் எவருடைய உத்திரவையும் பெறவேண்டியதில்லை. நாளுக்கு நாள் குறைந்து போகின்ற மனித உணர்வுக்குத் திரும்பவும் உயிர் கொடுத்து வலுவேற்றுகின்றவரும் அவரே. அவர்தான் செயலற்ற பொருளின் செயலையும், வாக்கற்ற பொருளின் வாக்கையும், மனித கர சரணுதிகளையும், மனித வாசகத்தையும் கொண்டு வெளியாகின்றவர்' என்றும்,

'சற்குருவின் போதனை கடல், வேத உபநிடதங்கள் குட்டைகள், மற்றைச் சாத்திரங்களோ, தப்பிக்க முடியாமல் சிக்க வைக்கும் வலைகள்' என்றும்,

'குருவைக் காட்டிலும் கடவுளை மேலாக எண்ணுவோர் மூடர். குருவின் பெருமைக்குமுன் கடவுளின் பெருமை நில்லாது. தன் குருவையும், கடவுளையும் சமமாக எண்ணுவோன் சற்சீடனுகான்' என்றும்.

'குருவை நேசிப்பது கடவுளை நேசிப்பதே. குருவைத் தேடுவது கடவுளைத் தேடுவதே. குருவின் பக்கத்தில் இருப்பது கடவுளின் பக்கத்தில் இருப்பதே' என்றும்,

"சற்குரு பெருமான்களுடைய பார்வைக்கு நேர்வனவும் அவர்கள் தொடுவனவுமான பண்டங்

கள் அனைத்தும் அமுதமாகமாறி, உடல் உயிர் களில் ஒட்டியுள்ள அழுக்குகளைக் கழுவித் தூய்மை யாக்குகின்றன."

என்றும் பறை சாற்று கின்றன.

இவ் வுலகில் உடலோடுள்ள ஒருவர்தான் இன்னொருவரை ஓர் ஊருக்கு அழைத்துச் செல்ல முடியும். அப்படியே, வான நாட்டில் குடியேறி யுள்ள ஒருவர் தான் நம்மை அத் தேவத் திரு நாட்டிற்கு அழைத்துச் செல்ல முடியும். ஆகையினால் தான், இப்போது நேரில் இருக்கிற குருபிரானின் உதவி அளவில்லாத தாகிறது. இன்னும், வெற்றி பெற அவருடைய இடைவிடா உதவி உள்முகமாகவோ, வெளிமுகமாகவோ இருந்தே ஆகவேண்டும். **சிவஞானசித்தியார்.**

"மந்திரத்தான் மருந்துகளால் வாய்த் தவியோகத்தால்
மணிஇரத குளிகையினுல் மற்றும் மற்றும்
தந்திரத்தே சொன்னமுறை செய்ய வேத
சகலகலை ஞானங்கள் திரிகால ஞானம்
அந்தமிலா அணிமாதி ஞானங்க ளெல்லாம்
அடைந்திடும்ஆ சான்அருளால் அடிசேர் ஞானம்
வந்திடுமற் ருென்ருலும் வாரா தாகும்
**மற்றவையும் அவனருளால் மருவு மன்றே "**

"பரப்பிரமம் இவனென்றும் பரசிவன்தா னென்றும்
பரஞானம் இவனென்றும் பராபரன்தா னென்றும்
அரன்தருஞ்சீர் நிலையெல்லாம் இவனே யென்றும்
அருட்குருவை வழிபடவே அவனிவன்தா ஞயே

இரங்கியவா ரணம்யாமை மீன்அண்டம் சினையை
இயல்பினெடும் பரிசித்தும் நினைந்தும் பார்த்தும்
பரிந்திவைதா மாக்குமா போல்சிவமே யாக்கும்
பரிசித்தும் சிந்தித்தும் பார்த்தும் தானே."

என்ற திருவிருத்தங்களால், "சகல கலைஞானம், திரிகால ஞானம் முதலியன குருபிரானில்லாமலும் வரும். திருவடிஞானமோ சற்குரு நாதரின் துணையின்றி ஒருக் காலும் வாராது. அப் பெருமான்களின் துணையால் மேலே சொன்ன திருவடி ஞானமும் மற்ற ஞானங் களும் ஒருங்கே வந்து கூடும்" என்றும், "கோழி, ஆமை, மீன் ஆகியவை, தம் முட்டைகளையும் குஞ்சுகளை யும் பரிசித்தும் நினைந்தும் பார்த்தும் தாமாகவே ஆக்குமாபோல் சிவகுரு பிரானும் சீடனைப் பரிசித்தும் பார்த்தும் சிவமாக்குவர்"

என்றும் கூறுகின்றது. **திருமந்திரமும்.**

"தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை யவிழ்ப்பர்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவனரு ளாலே."

என்கிறது. **பிரம கீதை,**

"பரிவொடுஒண் குரவன் பார்த்த பொழுதிலே
பரமா னந்தப்
பொருவிலாச் சிவரு பத்தை அடைவித்துப்
புரண மாக்கும்"

என்று பேசுகிறது.

**மணிவாசகப் பெருந்தகை** தமது குருமூர்த்தியவர்களிடம் தாம் பெற்ற ஈறிலாப் பெரும் பேறுகளை,

"கேட்டாரு மறியாதான் கேடொன் றில்லான்
கிளையிலான் கேளாதே யெல்லாங் கேட்டான்
நாட்டார்கள் விழித்திருப்ப ஞாலத் துள்ளே
நாயினுக்குத் தவிசிட்டு நாயி னேற்கே
காட்டா தனவெல்லாங் காட்டிப் பின்னுங்
கேளா தனவெல்லாங் கேட்பித் தென்னை
மீட்டேயும் பிறவாமற் காத்தாட் கொண்டான்
எம்பெருமான் செய்திட்ட விச்சை தானே."

என்றும், **திருநாவுக்கரசு சுவாமிகள்,** தாம் தமது குருபெருமானவர்களிடம் பெற்றவைகளை,

"நில்லாத நீர்சடைமேல் நிற்பித்தானை
நினையாவென் நெஞ்சை நினைவித் தானைக்
கல்லா தனவெல்லாங் கற்பித் தானைக்
காணா தனவெல்லாங் காட்டி னானைச்
சொல்லா தனவெல்லாஞ் சொல்லி என்னைத்
தொடர்ந்திங் கடியேனை யாளாக் கொண்டு
பொல்லாவென் நோய்தீர்த்த புனிதன் தன்னைப்
புண்ணியனைப் பூந்துருத்திக் கண்டேன்
நானே"

என்றும், **வடலூர் இராமலிங்க சுவாமிகள்** தமது குருநாதரவர்களிடம் பெற்றதை,

"சாகாத தலையிது வேகாத காலாந்
தரமிது காணெனத் தயவுசெய் துரைத்தே

போகாத புனலையுந் தெரிவித்தென் னுளத்தே
பொற்புற வமர்ந்ததோ ரற்புதச் சுடரே"

என்றும் எடுத் தியம்பியுள்ளார்கள். இன்னும், மணிவாசகருடைய குருதேவராகிய **பெருந்துறைப் பெருமான்,**

"விரிந்த சஞ்சித வினைகள் அன்புடன்நாம்
விழிக்க வெந்தன விரும்பும்இப் பிறப்பிற்
பொருந்தும் வல்வினை உடலுடன் அகலும்
புந்திசேர் அருள் வருவினை போக்கும்"

என்று அருளிச் செய்ததாகத் திருவாதவூரர் புராணமும் கூறுகின்றது.

இன்னும், இறைவனுடைய ஐந்தொழில், படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்று சொல்லப்பெறும். இவை, தூல உடம்பைத் தருதல், இவ்வுடம்பில் இன்பதுன்பங்களை அனுபவிக்கச் செய்தல், இத்தூல உடம்புகெட இன்னொரு உடம்பைத் தரும் வரை இளைப்பாறச் செய்தல், இன்ப துன்பங்களை வெறுக்காது ருசிக்கச் செய்தல், நன்மை தீமைகளைப் பகுத்து அறிவித்தல் ஆகும். இவையே சிவம் சீவர்களுக்குப் பொதுவாகச் செய்வது. சிவஞான குருபரன் தம் அடியார்களுக்குச் செய்தருளும் சிறப்புத்தொழில் வேறு. திருப்போரூர்ச் **சிதம்பர சுவாமிகள்,**

"பிறப்பறு வீட்டுற் பவமெனக் கருளி
பிறங்குசிற் சுகஅமிர் தருத்தி

ஒறுக்குமென் போதம் அனைத்தையும் அறுத்திங்
குலகிய லுணர்வெலாம் மறைத்து
விறற்றகு முனது திருவடி விளக்கி
மேன்மைஐந் தொழிலிவண் புரிவாய்"

என்று தமது தெய்வமாகிய குருபரனை வேண்டுவதால், சைவமெய்ந் நெறியாகிய குரு நெறியில், ஆச்சாரியன் மறுபிறப்புத் தந்து, அருளமுதம் ஊட்டி, அகந்தையை அறுத்து, உலகியல் உணர்வை மறைத்து, திருவடியை விளக்கும் சிறப்பான ஐந்தொழில் இவையென விளக்கமாகிறது. குருவில்லையேல் இவ்வாறு செய்பவர் வேறு எவரும் இல்லையாம். **தைத்திரீயோபநிஷதம்,**

" ஆச்சாரியனைத் தெய்வமாகப் பாவித்திரு "

என்றும், **வராஹோபநிஷதம்,**

"சிவனே குரு, சிவனே தேவன், சிவனே வேதம், சிவனே பிரபு."

எனவும்,

"தத்துவப் பிரவர்த்தகமுள்ள குருநாதருடைய பார்வையிற் பட்டார் அனைவரும் எல்லாப் பாதகங்களினின்றும் விடுதலையுறுகின்றனர்."

எனவும் முழங்குகின்றது.

இன்னும், தனிப்பட்ட முறையில் குருபிரானுடைய மகத்துவச் சிறப்பினை எடுத்துப் பேசுகின்ற **குரு கீதையில்,**

"சிவன் கோபித்த காலத்துக் குரு இரட்சிப்பவராகின்றார். குரு கோபித்த காலத்து இரட்சிப்பவர் ஒருவருமில்லை. ஆதலாற் குலகுருவை யடைந்து, அவரையே செவ்வையாக ஆசிரயிக்க வேண்டும்.

குரு நாமத்தை ஜபிப்பதினுல் அநேக ஜன்மங்களில் சம்பாதிக்கப்பட்டுள்ள பாவங்கள் நசித்துப் போகின்றன. சற்றேனும் சந்தேகமில்லை.

குருவைப் போன்ற தெய்வம், குருவைப் போன்ற தந்தை, குருவைத் தியானிக்கிறதைப் போன்ற கருமம் பூமியில் இல்லை; இல்லை.''

என்று பேசப் பெற்றுள்ளது.

## சிவபோகமே மெய்ப்பயன்

மெய்ப்பயன் என்பது பிரமத்தை அறிவதன்று, பிரமமாகவே ஆகிறது. இங்கே மணிவாசகப்பிரான், தாம் சிவமானதைக் குறிப்பிட்டுச் ''சிவமானவா பாடித் தெள்ளேணங் கொட்டாமோ'' என்றருளிச் செய்துள்ளது கவனிக்கத் தக்கது. ஒருஅவுன்ஸ் பயிற்சியானது அதைப்பற்றிய பேச்சின் ஒரு டன் எடைக்குச் சமமாகும். சமயத் தலைவர்கள் இல்லாத காலத்தில் அவர்களால் ஏற்படுத்தப்பெற்ற வெறும் அனுஷ்டானங்களே அவர்களுக்குப்பின் எஞ்சியிருக்கின்றன. அப்போது, மக்களும் இன்னொரு சற்குருவைத்தேடி அடையாமல், முன் நடைமுறையிலிருந்த அனுஷ்டானத்திற்கே இரையாகின்றூர்கள். கால தேசத்திற்குத் தக்கபடி அனுஷ்டானங்கள் வந்தன; அவை மட்டும் பயன்தரமாட்டா.

சிவம் தோன்றுகிற நிலையே மோன நிலை; சுத்த நிலை என்பதும் இதுவே. மறதியுற்றுத் தூக்கத்தில் ஒன்றும் அறியாமல் கிடப்பதும், நினைவுற்றுக் கண் காது முதலிய இந்திரியங்களோடு சேவிப்பதும் இல்லாமல்

இருக்கும் நிலையே இது. இதுவே, சூரியன்முன் எரியும் பகல் விளக்கைப்போல் கருவிகளும் ஆன்மாவும் கூடிச் சீவியாமல் சீவித்து இருக்கும் நிலை. இந் நிலையையே தெய்வலோகம் திருக்கயிலாயம் என்பர். இதுவே நம் முடைய சொந்த வீடாகும். சீவன், தான் நினைத்த நேரத்தில் உடலை விட்டுத் தெய்வ லோகத்திற்குச் சென்று வந்தாலொழிய, அது தன் இலட்சியத்தைப் பெற்று சிவமானதாக எண்ண முடியாது. காரைக்கால் அம்மையார் தலையால் நடந்து சென்றதும், தம்பிரான் தோழராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் வெள்ளை யானை மீதும், அவரது நண்பர் சேரமான் பெருமாள் நாயனர் வெள்ளைக் குதிரை மீதும் ஏறிச் சென்றதும் இந்தத் திருக் கயிலைக்கே. உடல் உள்ள போதே இந்தச் சிவபுரத் திருவளர் நாட்டிற்குச் சென்று, சிவ பரஞ்சுடரைத் தரிசித்துப் பேரானந்தப் பெருங்கடலில் திளைப்பதே சிவபோக மென்னும் பிறவிப் பெரும்பய னாகும்.

இந்தப் பேரானந்தத்தினை அண்ணமலையில் வசித்த **அருணகிரிநாத முனீந்திரர்** அவர்கள்,

"குமரனை மெய்யன்பி னுல்மெல்ல மெல்லஉள்ள
அரும்பும் தனிப்பர மானந்தம் தித்தித் தறிந்தவன்றே
கரும்பும் துவர்த்துச்செந் தேனும் புளித்தறக்
கைத்ததுவே."

என்றும்,

"போக்கும் வரவும் இரவும் பகலும் புறம்புமஉள்ளும்
வாக்கும் வடிவும் முடிவும் இல்லாதுஒன்று வந்துவந்து

தாக்கும் மனோலயந் தானே தரும்எனைத் தன்வசத்தே
ஆக்கும் அறுமுக வாசொல்லொ ணாதிந்த ஆனந்தமே.''

என்றும் அருளிச் செய்துள்ளார். **தாயுமானச் செல்வர்,**

"அகண்டாகார சிவபோக மெனும்
பேரின்ப வெள்ளம் பொங்கித் ததும்பிப்
பூரணமாய், ஏகவுருவாய்க் கிடக்குது.''

என்று அருளியுள்ளார்.

இவ்விளக்கங்கள், மெய்யாக உள்ளதில் கோடியில் ஒரு பங்கையும் குறித்தனவாக மாட்டா என்று அறியக் கிடக்கிறது.

## முடிப்புரை

முடிப்புரையாகச் சொல்லுமிடத்து, சிவமென்னும் கர்த்தா ஒருவர். சீவான்மாக்கள் பல. சிவம் கட்டில்லாதது. சீவான்மா கட்டுப்பட்டது. சிவம், உடலில்லாதது. சீவன் உடலுள்ளது. சிவம் சீவான்மாவுக்கு ஆன்மாவா யிருப்பதால், சீவான்மாவின் இச்சையை அறிகிறது. சீவன் பேரின்பத்தைப் பெற விரும்பினால், சிவம், வீடு பெற்றுள்ள ஒரு சீவன் முத்தராகிய சற்குரு பெருமானிடமாக நின்று, அந்தச் சீவனுடைய கட்டென்னும் திரைகளை விலக்கியருளித் தன்னுடைய சொந்த நாட்டில் குடியேற்றி, நிலைபேறான பேரின்பத்தை ஈந்தருளுகின்றது. இதுவரை கூறியவாற்றால் சற்குரு பெருமானுடைய ஒப்பற்ற திருவடித் துணையினைப் பெற்று, சிவமாகிய கடவுளுடைய சம்பந்தத்தைப் பெறுவதே சன்மார்க்கமும் சைவ மெய்ந்நெறியுமாகும் என்க.

"சிவனை வழிபட்டார் எண்ணிலாத் தேவர்
அவனை வழிபட்டங் காமாருன் றில்லை
அவனை வழிபட்டங் காமாறு காட்டுங்
குருவை வழிபடிற் கூடலு மாமே."

"குருவே சிவமெனக் கூறினன் நந்தி
குருவே சிவமென் பதுகுறித் தோரார்
குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்
குருவே உரையுணர் வற்றதோர் கோவே."

—திருமந்திரம்.

"அடுத்ததின் றன்மை யான்மா வாகுமென்
றறிந்து நல்லோர்
நடித்திடுஞ் சமய வாத நற்றவம் செபந் தியானம்
படிற்றுல கியற்கை யாவும் பரகதி விலக்கா
மென்றே
விடுத்தருட் குரவன் பாத மேவிமெய்ப் பணிசெய்
வாரே."

—வீராகமம்.